# அம்புலிமாமா



மதிமுகம் : 102 மே 2000 புன்னகை : 9

## பொருளடக்கம்



### சிறப்புப் படைப்பாக



வேதாளம் சொல்லும் கதை



பசுபதியின் மணம்



தங்க சிம்மாசனம்

**கண்டுபிடியுங்கள் எழுதுங்கள் பரிசுகளை வெல்லுங்கள்**

**அம்புலிமாமா**






Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai-600 026. Editor: Viswam

# அம்புலிமாமா

## ஏப்ரல் 2000




## விடைகள்

1. திருவள்ளுவர் - வாசுகி
2. அ. திருதராஷ்டரன் காந்தார மன்னனின் மகள் காந்தாரியை மணந்து கொண்டான்.
   ஆ. சால்வமன்னனின் புதல்வி சாவித்திரியை சத்தியவான் மணந்து கொண்டான்.
   இ. சகாதேவனின் தாய் மாத்ரி. மத்ரதேச இளவரசி.
   ஈ. கர்ணன் அங்கநாட்டின் அரசனாக ஆக்கப்பட்டான்.
   உ. அர்ஜுனனுக்கும் சித்திராங் கதைக்கும் பிறந்தவன் பப்ருவாகனன். சித்திராங்கதை மணிப்பூர் இளவரசி. இன்று அந்த நாடு மணிப்புரி எனப் படுகிறது.
3. அ. அர்த்த சாஸ்திரம், சாணக்கியர்
   ஆ. காஷ்மீர மன்னர்களின் வரலாறான 'ராஜதரங்கிணி! 12வது நூற்றாண்டைச் சேர்ந்த கல்ஹணர்.
   இ. பாஸமகாகவி.
   ஈ. ராஜாபர்த்துருஹரி. நீதிசதகம், சிருங்கார சதகம், வைராக்கிய சதகம்
   உ. உத்தர காண்டம்.

குறிப்பு: 1. ஜனவரி போட்டியில் யாரும் முழுமையாக சரியான விடைகளை அனுப்பவில்லை.

2. கதைகளைப்பற்றி சிலர் எழுதியது ஓரளவு ஒப்புக் கொள்ளக் கூடியதாக இருந்தாலும் திருப்திகரமாக இல்லை.

3. போட்டியில் கலந்து கொள்பவர்கள் கதைகளை ஆழ்ந்து படித்து விட்டுத் தங்கள் அபிப்பிராயங்களை எழுத வேண்டும்.

# ஆக்கபூர்வமான போட்டிகள்

## அம்புலிமாமா வாசகர்களுக்கு

உங்கள் அறிவுத் திறனைக் காட்ட பல்வேறு போட்டி களில் கலந்து கொள்ளுங்கள்.





## போட்டோ வாக்கியப்போட்டி

1. ஒன்றுக்கொன்று ஏதாவது வகையில் தொடர்புள்ள இரு போட்டோக்களை இளம் போட்டோகாரர்கள், அத்தொடர்பு பற்றிய விளக்கத்துடன் எமக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக் கப்படும் (இரு) போட்டோக்களுக்கு பரிசு ரூ.500/-
2. ஒரு பழமொழியைப் பிரசுரிக்கி



றோம். அதை விளக்கும் நிகழ்ச்சியை யோ, உங்கள் சொந்த அனுபவத்தை யோ அல்லது புதிய பழைய கதை களையோ 300 சொற்களுக்கு மேற் படாமல் எழுதி அனுப்புங்கள்.

இம்மாதப் பழமொழி:

**முடவன் கொம்பு தேனுக்கு ஆசைப்படுவது போல**

தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்பிற்குப் பரிசு ரூ.500/-

உங்கள் படைப்பு ஏப்ரல் 30க்குள் எமக் குச் சேர வேண்டும். பரிசு பெற்ற படைப்பு ஜுன் மாத இதழில் பிரசுரிக் கப்படும்.

உங்கள் படைப்புகளை அனுப்ப வேண்டிய முகவரி : **அம்புலிமாமா ஆக்க பூர்வமான போட்டிகள்,** சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.

- ஆசிரியர்
அம்புலிமாமா



நிறுவனர் :
பி. நாகிரெட்டி
சக்ரபாணி

## புதிய அருணோதயத்தில் அம்புலிமாமா

இந்தியாவின் எல்லாச் சிறுவர் சிறுமியர்கள் ஒருமைப்பாட்டை உணர்ந்து தம் எதிர்காலத்தை நாட்டின் வளர்ச்சியோடு பிணைத்துக் கொள்ள வேண்டுமென்று அம்புலிமாமா இன்பக்கனா காண்கிறது. இவரகளை கடந்த காலத்தைத் தெரிந்து கொண்டு எதிர்காலத்தை நோக்கினால் தற்போதைய வாழ்க்கையை செழுமையாக்கிக் கொள்ள முடியும்.

கடந்த ஐம்பது ஆண்டுகளாக அம்புளிமாமா தன் பன்னிரெண்டு மொழிப் பதிப்புகளால் இப்பணியைச் செய்து வருகிறது. தற்போது மும்பையின் 'மிட்டே' என்ற வெளியீட்டுடன் சேர்ந்து மேலும் சிறப்பாக இப்பணியைச் செய்ய முன் வந்துள்ளது. ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் இந்த வெளியீட்டுடன் 'ஃபன்டே வித் சந்தமாமா' வெளியிடப்படும். இப்போது இன்டர்நெட்டிலும் விவரங்களை அறியலாம்.

அம்புலிமாமா தேர்வுகள் வாயிலாக அல்லாமல் முன் உதாரணங்களைக் கூறி கதைகள் வாயிலாக நம் நாட்டின் பழம் பெருமைகளையும் வரலாற்றையும் சிறுவர்களுக்கு விளங்க வைக்கிறது. இந்த முயற்சியில் அயராது ஈடுபட்டு இளம் சிறார்கள் அதிக எண்ணிக்கையில் படித்து முன்னேறும் பணியில் தன்னை அம்புலிமாமா அர்ப்பணித்துக் கொள்ளும் என உறுதி கூறுகிறது.

# செய்திச் சுடர்

## உருகிப் போகும் இமயம்!

பல தொழில்களாலும் வாகனங்களாலும் சுற்றுப்புறச் சூழல் கரிவாயுவால் மாசுபடுத்தப்பட்டு சூடு அதிகமாகிறது. இந்த வெப்பத்தின் காரணமாக இமய மலையின் பெரும் பனிப் பாறைகள் உருகி ஓட



ஆரம்பித்து விட்டன. 1999ல். சிந்து நதியின் நீர் மட்டம் மிகவும் உயர்ந்து விட்டது. மனிதன் சுற்றுப்புறத்தை மாசுப்படுத்துவதை தடுக்காவிட்டால் இமய மலையின் அடிவாரத்திலுள்ள பரந்த பகுதிகள் வெள்ளத்தில் மூழ்கும் அபாயத்தில் உள்ளது என்று 'உலகக்கண் காப்புக்கழகம்' எச்சரித்துள்ளது.

## விமானக் கடத்தல்காரர்களுக்குப் பேரிடி!

போதைப் பொருள்களையும் விலையுயர்ந்த வஸ்துக்களையும் பயணிகள் தாம் அணிந்துள்ள ஆடைகளில் மிகத் தந்திரமாக ஒளித்து வைத்திருந்தாலும் இப்போது உருவாக்கப்பட்டுள்ள சோதனைக் கருவி உடனே தெரிவித்து விடுகிறது. இது தற்போது உபயோகப்படும் உலோகச் சோதனைக் கருவிகளால் கண்டு பிடிக்க முடியாதவற்றைக்




கூடக் கண்டு பிடித்து விடுமாதலால் விமான கடத்தல்காரர்களைப் பிடித்து ஒழிக்க இக்கருவியைப் பயன்படுத்த ஆரம்பித்து விட்டார்கள்.

## காது கேளாதோர்க்கு நற்செய்தி!

பிறவி முதல் காது கேளாதிருக்கும் குழந்தைகளுக்குக் கேட்கும் சக்தியை




அடைந்து விடும் நல்வாய்ப்பு உள்ளது. பிரிட்டிஷ் விஞ்ஞானிகள் குழந்தைகளின் காதுகளில் வைத்துக் கொள்ள மிகச்சிறிய காது போன்ற கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அது வெளியே தெரியாமல் காதோடு ஒட்டி இருக்கும். பாட்டரியால் இயங்கும் இக்கருவி இப்போதுள்ள கேட்க உதவும் கருவிகளை விடப் புதுமையானது.

Cut along the dotted line

# நம் வாசகர்களிடையே கருத்துக் கணிப்பு

அம்புலிமாமாவும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளும் மீண்டும் 1999 டிசம்பரிலிருந்து வெளியிடப் பட்டு வருகின்றன. இப்போது உங்கள் கையில் இருப்பது ஐந்தாவது இதழ். இதற்கு முன் வெளி வந்த நான்கு இதழ்களை யும் நீங்கள் ரசித்துப் படித்து மகிழ்ந்திருப்பீர்கள். கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாகத் தன் தனிச்சிறப்பால் உங்களைப் பெரிதும் கவர்ந்த இப்பத்திரிகை தற்போது பல மாற்றங்கள் கொண்டிருப்பதைக் காண்கிறீர்கள். பொருளடக்கத்திலும் ஓவிய அமைப்புகளிலும் உயர்ந்து நல்ல தரமான காகிதத் தில் அச்சடிக்கப்பட்டுள்ளது. இம்மாற்றங்கள் நாங்கள் ஒவ்வொரு இதழையும் அதன் முந்தைய இதழை விட உயர்தரமாகக் கொண்டு வர முயன்று வருகி றோம். கடந்த நூறு நாட்களாக எமக்குக் கிடைக்கும் கடிதங்களைக் கொண்டு இந்த மாற்றங்களை வாசகர்கள் கவனிக்காமல் இருந்துவிடவில்லை என்பது தெளிவாகிவிட்டது. நாம் எம் எண்ணப்படி இப்படியே இருந்துவிட விரும்பாமல் எம் வாசகர்கள் இதில் என்னென்ன மாற்றங்களைச் செய்ய விரும்புகிறார்கள் என்றும், எவற்றைச் சேர்க்கவே விரும்புகிறார்கள் என்றும், எவற்றையெல்லாம் ஒதுக்கிவிட்டு அவற்றிற்கு பதிலாக புதிதாக எவற்றைச் சேர்க்க விரும்புகிறார்கள் என்பதனையும் அறிய விரும்புகிறோம். நீங்கள் இதற்கு உதவுவீர்கள்தானே, இதற்காக நீங்கள் எம் வினாக்களுக்கு விடையளிக்க வேண்டுகிறோம்.

நீங்கள் இவ்வினாத் தாளை குறிப்பிட்டுள்ள இடத்தில் கத்தரித்து விரைவில் தபாலில் அனுப்புமாறு உங்கள் ஒவ்வொருவரையும் கேட்டுக் கொள்கிறோம். இதை மிக எளிதானதாக ஆக்கியுள்ளோம். பெரும்பாலும் கட்டங்களில் நீங்கள் உரிய இடத்தில் இக்குறியை ( ) இட வேண்டியது தான். இனி விடைகளை அளியுங்கள்.

1. இதழ்கள் எனக்குக் கிடைப்பது ☐ சந்தாவின் வாயிலாக
   இதழ்களை நான் வாங்குவது ☐ பேப்பர் போடும் பையனிடம்
   இதழ்களை நான் வாங்குவது ☐ பேப்பர் கடையிலிருந்து
   இதழ்களைக் கேட்டுப்படிப்பது ☐ நண்பனிடம்
   படிப்பகத்திலிருந்து

2. நான் வழக்கமாக/அவ்வப்போது படிப்பது ☐ காமிக்ஸ் ☐ கதைப்புத்தகங்கள் ☐ சிறுவர்களுக்கான பத்திரிகைகள்
   ........................................................................ (பெயரை எழுதவும்)

3. நான் இப்பத்திரிகையைப் படிப்பது ஆங்கிலத்தில்/தமிழில்/தெலுங்கில் மலையயாளத்தில்/கன்னடத்தில்/ஹிந்தியில்/மராட்டியில்/குஜராத்தியில்/ வங்கமொழியில்/அஸ்ஸாமிய மொழியில் ஒரியாவில்/சமஸ்கிருதத்தில்.

4. கடந்த நான்கு மாதங்களில் நான் படித்தது
   ☐ எல்லா நான்கு இதழ்களையும் ☐ மூன்று இதழ்கள் ☐ இரண்டு இதழ்கள் ☐ ஒரு இதழ்



5. எனக்குப் பிடித்தது இவ்வரிசையில்

☐ தொடர்கதை ☐ புராணம் ☐ வேதாளக்கதை

☐ பல நாட்டுக் கதைகள் ☐ மற்ற கதைகள்

☐ தீர்வு காணப்படாத கதைகள் ☐ இந்தியப் பழம்பெருமை ☐ பெரியோர் வரலாறு

☐ செய்திச்சுடர் ☐ பாரதநாடு அன்றும் இன்றும்

☐ பாரத நாட்டைக் காணல் புதிர்கள் ☐ புதிர்கள்/போட்டிகள்

☐ இன்றைய உலகம் ☐ நல்ல ஆங்கிலம் கற்றல்

☐ நாம் அறிந்து கொள்வோம் ☐ நதிகளின் வரலாறு

(உங்கள் விருப்பத்தை 1லிருந்து 16 வரை வரிசையாக எண்ணிடவும்)

6. அம்புலிமாமாவில் இவற்றைச் சேர்க்க விரும்புகிறேன். (வரிசைப்படி விருப்பம்)

அ) .................................................. ஈ) ..................................................

ஆ) .................................................. உ) ..................................................

இ) .................................................. ஊ) ..................................................

7. அட்டைப்பட ஓவியம் இவ்வாறு இருக்க வேண்டும்

☐ தீரச்செயல் தொடர் கதைக்காட்சி ☐ புராணக்கதை காட்சி

☐ மற்ற கதைகளில் ஏதாவது ஒன்றன் காட்சி

8. இதழின் ரூ. 10 என்ற விலை என்பது ☐ மிக அதிகம் ☐ பரவாயில்லை

☐ குறைக்கலாம் (சற்று தரக்குறைவான காகிதம் பயன்படுத்தி)

9. அ) நான் சந்தாதாரர் ஆ) நான் சந்தாதாரராக விரும்புகிறேன்

பெயர் .................................................................................. வயது ..........................

முகவரி .................................................. பள்ளி ..................................................

.................................................................................................................................

.................................................................................................................................

.......................................... பின்கோடு ......................... மாநிலம்.......................

இ) நான் பள்ளிக்குப் போவது ☐ என்சைகிளில் ☐ பள்ளிக்கூட பஸ்ஸில்

☐ நகர பஸ்ஸில் ☐ என் பெற்றோரின் வண்டியில்

ஈ) என் கைச்செலவு பணம் ☐ ரூ. 100க்கும் குறைவு ☐ ரூ100க்கும் மேல்

பெற்றோரின் கையொப்பம் கையொப்பம்



வேதாளம்
சொல்லும் கதை

# அறிவற்றவனா!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் துணிச்சலுடன் ஏதோ ஒரு வேலையில் மும்முரமாக முனைந்திருக்கிறாயே. இம் மாதிரி முயல்பவர்களில் பலர் அறிந்தோ அறியாமலோ தமக்குக் கிடைத்த நல் வாய்ப்புகளை நழுவ



விட்டதும் உண்டு. இதை விளக்க கலாதரன் என்ற ஒரு இளம் சிற்பியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

வெகுகாலத்திற்குமுன் சந்தனபுரத்தை சந்திரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகள் சந்திரகலா. அவள் அழகில் ரம்பையையும் ஊர்வசியையும் தோற்கடிப்பவள் என்று கூறப்பட்டு வந்தது. அந் நாட்களில் அரச குடும்பத்துப் பெண்கள் பிற ஆண்களில் கண்களில் படாமலேயே அந்தபுரத்திலேயே இருந்தும் வந்தார்கள். எனவே இளவரசி சந்திரகலா எப்படிப்பட்ட அழகி என அந்நாட்டு மக்களுக்குக்குத் தெரியவில்லை.

ஒரு நாள் சந்திரகலா தன் தந்தையிடம் தன்னைப் போல் ஒரு கற்சிலையை உருவாக்கித்தர வேண்டுமெனத் தன் ஆசையைத் தெரிவித்தாள். மன்னனும் பல பெண் சிற்பிகளை வரவழைத்து சந்திரகலாவின் சிலைகளை உருவாக்கித் தரும்படி கூறினான். ஆனால் அவர்கள் உருவாக்கிய சிலைகளைக் கண்டு சந்திரகலா திருப்தி அடையவில்லை. இதை கவனித்த மன்னன் தன் மகளின் ஆசையை எவ்வாறு நிறைவேற்றி வைப்பது என்று யோசிக்கலானான்.

அப்போது அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அதன்படி அவன் நாடு முழுவதிலும் ''என் மகள் சந்திரகலாவின் உருவத்தை கற்சிலையில் வடித்துக் கொடுக்கும் சிற்பிக்கு ஏராளமான பரிசுகளைக் கொடுப்பதுடன் அவரை என் ஆஸ்தான சிற்பியாகவும் நியமிப்பேன்'' என்று பறை சாற்றுவித்தான். அச்சமயம் சந்திரபுர எல்லையில் அமைந்துள்ள சிற்பப்பள்ளியில் பயிற்சி பெற்று வந்த கலாதரன் என்ற இளைஞன் தன் தாய் தந்தையரைக் காணத் சந்திரபுரத்திற்கு வந்திருந்தான்.

மன்னனின் அறிவிப்பைக் கேட்ட அவன் தன் தந்தை கங்காதரனிடம் ''தந்தையே நீங்களும் சிற்பக் கலையில் கை தேர்ந்தவர்தாமே. ஒருவரைப் பார்த்திராமலேயே அவரது வடிவத்தை சிலை உருவில் செய்ய முடியுமா?'' என்று கேட்டான். கங்காதரனும் சிரித்த வாறே ''மகனே! நீ எதற்காக இக் கேள்வி

யைக் கேட்கிறாய் என்பது தெரிகிறது. இளவரசி சந்திரகலாவைப் பார்க்காமல் இருந்தாலும் அவளது உருவச்சிலையை உருவாக்க முடியுமா என்பதுதானே உன் கேள்வி? பொதுவாக எல்லா சிற்பி களாலும் இப்படிச் செய்ய முடியாது என்றாலும் இப்படிச் செய்ய வழிஇல்லாமல்போகவில்லை. இதற்கு மந்திர தந்திரங்களைக் கற்றாக வேண்டும். நம்நாட்டில் தென்கிழக்கு முனையிலுள்ள காட்டிற்கு ஒவ்வொரு அமாவாசை இரவில் யட்சிணிகள் வந்து போகிறார்கள். அவர்கள் மந்திரதந்திரங்களில் கைதேர்ந்தவர்கள். அவர்களது உதவி பெற்றால் இவ்வுலகில் எதையும் செய்துவிடலாம். நாளன்றைக்கு அமாவாசை. நீபோய் முயன்றுபார். கண்டிப்பாக நீ வெற்றி பெறுவாய். ஆஸ்தான சிற்பிப்பதவியும் உனக்குக் கிடைக்கும்.'' என்றான்.

கலாதரனும் தன் தந்தையை வணங்கி அவனது ஆசிகளைப் பெற்று அன்றே ஒரு குதிரை மீதமர்ந்து யட்சிணிகள் வந்து போகும் காட்டை அமாவாசையன்று மாலையில் போய்ச் சேர்ந்தான். அங்கு ஒரு பெரிய குளத்தைக்கண்டு தன் குதிரையை கரையிலுள்ள ஒரு மரத்தில் கட்டி விட்டு அக்குளத்தில் இறங்கிக் குளித்தான். பின் கரைக்குவந்து தான் கொண்டு வந்திருந்த உணவை உண்டுவிட்டுக் குளத்து நீரை அள்ளிக்குடித்துவிட்டு மரத்தடியில் படுத்துக் கண்ணயர்ந்தான். அவனுக்கு நல்ல தூக்கம்



வந்து விட்டது.

யாரோ 'கல''கல' வென்று சிரிக்கும் சத்தம் கேட்கவே தூக்கம் கலைந்து கலாதரன் கண்விழித்துப் பார்த்தான். தன்னெதிரே இரு அழகிகள் நின்றுகொண்டிருப்பதை அவன் கண்டான். அவர்களது நடை, உடை, பாவனைகளைக் கண்டு அவர்கள் யட்சிணிகளாகத்தான் இருக்கவேண்டுமென்று கலாதரன் ஊகித்து விட்டான்.

அப்பெண்களும் அவனைப் பார்த்து ஆச்சரியபட்டார்கள். பிறகு அவர்கள்'' ஓஹோ! நாங்கள் சிரித்ததால் உன் தூக்கம் கலைந்து விட்டதா? பரவாயில்லை. இன்னும் நள்ளிரவு கூட ஆகவில்லை. பொழுது விடிய இன்னும் மூன்று ஜாமங்கள் உள்ளன.



பாராமல் அவரது உருவத்தைச் சிலையாக வடிப்பது ஒரு அரிய கலை. என்பெயர் கமலா. இவள் பெயர் விமலா. எங்கள் இருவரின் சிலைகளை உருவாக்கி அவற்றை நீ இந்தக் காட்டில் வைக்க உறுதிமொழி கொடு. முதலில் சந்திரகலாவின் சிலையை உருவாக்கிய பின் எங்கள் சிலைகளை இங்கே வைத்தால் போதும்'' என்றாள்

கலாதரனும் ''ஓ! அப்படியே செய்கிறேன். உங்கள் சிலைகளை வடித்து இங்கு நிறுவுவதாக வாக்களிக்கிறேன். ஆனால் சந்திர கலாவை ஒரு முறை கூடப் பாராமல் எப்படி அவளது சிலையை உருவாக்குவது என்றுதான் யோசிக்கிறேன்'' என்றான். அப்போது கமலா ஒரு சொடுக்கு சொடுக்கி ஏதோ மந்திரத்தை உச்சரித்து '' இதோ பார் உன்நாட்டு இளவரசி சந்திரகலா'' என்றுகூறி விமலாவைத்தொட்டாள். மறு விநாடி அங்கு யட்சிணி விமலா விற்கு பதிலாக அழகிய மானிடப் பெண் ஒருத்தி நின்று கொண்டிருந் தாள். அவளைக் கண்கொட்டாமல் பார்த்த கலாதரன் ''சந்தேகமே இல்லை. இவள் அரசுகுமாரி சந்திர கலாவாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் விமலா என்னவானாள்? '' என்று எண்ணிச்சுற்றிலும் பார்க்க லானான்.

அப்போது அந்தப்பெண்''நான் தான் சந்திரகலாவாக உருவெடுத் துள்ள விமலா. என் குரலைத்

உனக்குத்தூங்கப்போதியநேரம் உள்ளது''. என்றார்கள்.

அதைக்கேட்ட கலாதரனின் பயம்போயிற்று. அவனும் ''நீங்கள் யட்சிணிகள் என்று நினைக்கிறேன். உங்களுக்கு வணக்கம். நான் ஒரு சிற்பி.'' எனக்கூறி அந்நாட்டு இளவரசியைப்பாராமலே அவளது உருவச் சிலையை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதாக கூறி'' இதற்கு உங்கள் உதவிதேவை. அதற்காகவே இந்தக்காட்டிற்கு இன்று வந்து உங்களைச்சந்தித் தேன்'' என்றான். அதுகேட்டு அந்தயட்சிணிகள் ஏதோ சமிக்ஞை கள் செய்து கொண்டார்கள். அதன் பின் அவர்களில் ஒருத்தி ''நீ சொல்வது போல ஒருவரைப்

தெரிந்து கொள்ள முடியவில்லையா?'' என்று கேட்டாள். கலாதரனும் ''அடேயப்பா! என்ன அதிசயம்! யட்சிணிகளால் முடியாதது என்று ஒன்றுமில்லை என்பது உண்மையே. அரசகுமாரி சிலையை உருவாக்க எனக்கு நல்ல சலவைக்கல் வேண்டும். அடுத்து இப்போது அரசகுமாரியாக உள்ள பெண் மீது நல்ல வெளிச்சம் விழவேண்டும். அதுபோல் சலவைக்கல் மீதும் வெளிச்சம் விழவும் வேண்டும்'' என்றான்.

மறு நிமிடம் கமலா சொடுக்குப் போட்டு ஏதோ மந்திரத்தை உச்சரித்தாள். அடுத்தகணமே, மரத்தோடு சாய்ந்து ஒரு பெரிய சலவைக்கல் வந்து விட்டது. அரசகுமாரி மீதும் சலவைக்கல் மீதும் நல்ல வெளிச்சம் பட்டது. கலாதரன் தான் கொண்டு வந்த பையிலிருந்து உளியையும் சுத்தியலையும் எடுத்து சலவைக் கல்லில் சந்திரகலாவின் உருவை செதுக்கலானான். அப்போது கமலா ''உன் வேலையை விரைவில் முடிக்க உனக்கு ஆயிரம் மடங்கு சக்தியை அளிக்கிறேன்.'' என்று கூறினாள். கலாதரனும் தன் முன்னுள்ள அரசகுமாரியைப் பார்த்துப் பார்த்து சலவைக் கல்லில் உருவம் செதுக்கலானான். ஒருமணி நேரத்திற்குள் சந்திரகலா சிலை தயாராகிவிட்டது. விமலாவும் முன்போலாகி விட்டாள்.

கலாதரன் அந்த யட்சிணிகளிடம்



''உங்கள் உதவிக்கு மிக்க நன்றி. இந்த சிலையையும் என்னையும் தலைநகரிலுள்ள என் வீட்டில் கொண்டு சேர்த்து விடுங்கள். இச்சிலையை மன்னனிடம் ஒப்படைத்து விட்டு அடுத்த அமாவாசைக்கு இங்கு வந்து உங்கள் சிலைகளைச் செய்கிறேன்'' என்றான். யட்சிணிகளும் அடுத்த விநாடியே அரசகுமாரிச் சிலையையும் கலாதரனையும் அவனது குதிரையையும் தலைநகரில் அவனது வீட்டிற்குக் கொண்டு போய் விட்டு விட்டு மாயமாய் மறைந்தார்கள். அப்போது விடியும் வேளை. அவனது தந்தை திடீரென கலாதரன் வந்து நின்றதையும் அவனோடு அரசகுமாரிச் சிலை



இருப்பதையும் கண்டு திகைத்துப் போனான். கலாதரன் காட்டில் நடந்ததை எல்லாம் விவரமாகத் தன் தந்தையிடம் கூறினான்.

அன்று மாலை நான்கு அரசாங்க வீரர்களின் உதவியுடன் அரண்மனை யிலுள்ள சிற்பக்கூடத்தில் சிலை யைச் சேர்த்து விட்டு கலாதரன் மன்னனுக்குத் தகவலளித்தான். மன்னனும் சிற்பகூடத்திற்கு வந்து தன் மகளின் உருவம் அப்படியே சிலையில் இருப்பது கண்டு ஒரேயடியாக மகிழ்ந்து போனான். சந்திரகலாவோ ''ஆகா! இவ்வளவு அழகாக என் சிலையை யாரும் செய்ய முடியாது. இந்த கலாதரர் தெய்வீக சக்தி படைத்தவர்'' எனப்பாராட்டினாள். மன்னனும் ஒரு வாரத்துள் நல்ல முகூர்த்த நாள் பார்த்து கலாதரனுக்கு ஆஸ்தான சிற்பிப் பதவியை அளிக்கப் போவதாக நகரில் பறைசாற்று வித்தான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. மன்னர் உடனே அழைத்து வரச் சொன்னாரென்று ஒரு வீரன் கலாதரனிடம் தெரிவித்தான். கலாதரனும் அரண்மனையில் மன்னனைக் கண்டபோது மன்னனும் ''கலாதரரே! உமக்கு இணையான சிற்பி இந்த உலகில் இல்லை. நீங்கள் என் மகளைப் பார்க்காமலேயே அவளது உருவச் சிலையை உருவாக்கிக் கொடுத்தது போல என் மைத்துனியின் மகள் மணிமாலாவின் சிலையையும் செய்து தர வேண்டும். இதன் பின்னரே உங்களுக்கு அரசாங்க சிற்பிப் பதவி அளிக்கப்படும்'' என்றான்.

இதைக் கேட்ட கலாதரன் திடுக்கிட்டான். சற்று நேரம் கழித்து அவன் மன்னனிடம் ''அரசே! நீங்கள் கூறுவது போலவே செய்தால் போயிற்று'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான். அவன் தந்தையிடம் ''தந்தையே! இன்றிரவே நாம் இந்த நாட்டை விட்டு அண்டை நாட்டிற்குப் போய் விட வேண்டும். அந்த நாட்டு மன்னன் இந்நாட்டு மன்னனைவிட அதிக பலம் படைத்தவன். அவனது பாதுகாப்பில் நாம் இருந்தால் இந்நாட்டு மன்னனால் நம்மை

எதுவும் செய்ய முடியாது. மேலும் யட்சிணிகளுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றியாக வேண்டும்'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! கலாதரன் தன் நாட்டை விட்டுப் போவது அறிவற்ற செயல்தானே. சந்திரசேன மன்னன் கூறியபடி இன்னொரு சிலையையும் செய்து கொடுத்துவிட்டு அரசாங்க சிற்பிப் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கலாமே. ஏன் அப்படிச் செய்யாமல் வேறு நாட்டிற்குப் போய் விட்டான்? இக் கேள்விகளுக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ பதில் கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சந்திரசேனன் தன் மகளைப் பாராமலேயே ஒரு சிற்பி அவளது சிலையை உருவாக்க வேண்டுமென்றும் அப்படிச் செய்தால் அரசாங்க சிற்பிப் பதவியை அந்த சிற்பிக்கு அளிப்பதாக நாடறிய பறைசாற்றுவித்தான். கலாதரன் யட்சிணிகளின் உதவியால் தான் சந்திரகலாவின் சிலையைச் செய்து கொண்டுவந்து கொடுத்தான். மன்னனோ கலாதரனுக்கு உடனே பதவியைக் கொடுக்காமல் தன்மைத்துனியின் மகள் மணிமாலாவின் சிலையையும் அவளைப் பாராமலே செய்து கொடுத்தாலே பதவி கொடுக்கப் படும் எனக் கூறினான். கலாதரன் யட்சிணிகளின் உதவியால் மீண்டும் ஒரு சிலையைச் செய்து கொடுத்தாலும் மன்னன் அதுபோல இன்னும் எவ்வளவு சிலைகளைச் செய்யச் சொல்வானோ. இப்படி நிர்பந்தத்தில் என்றென்றும் இருந்து கொண்டு பதவியில் ஒட்டிக் கொண்டிருப்பதைவிட அதை உதறித் தள்ளிவிட்டு சந்திரசேனனால் எதுவும் செய்ய முடியாத பத்திரமான இடத்திற்குக் கலாதரன் போய் விட்டது அறிவு பூர்வமான செயலே'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டு விட்டது.



# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

## ரவீந்திரநாத தாகூர்

கவியரசர் ரவீந்திர நாத தாகூர் 1861 மே மாதம் 7ந் தேதி கல்கத்தாவில் பிறந்தார். அவரது தந்தை தேவேந்திரநாததாகூர் கொடை வள்ளல்கள் தோன்றிய குடும்பத்தில் பிறந்தவர்.

ரவீந்திரர் சிறு வயதிலிருந்தே கவிதைகள் புனைய ஆரம்பித்தார். பங்கீம் சந்திரரின் வந்தே மாதரம் பாடலைப் போல இவரது ஜனகண மன என்ற பாடல் நம் தேசீய கீதமாக விளங்கி வருகிறது. ரவீந்திரர் கவியரசர் என்று உலகப் புகழ்பெற்றதோடு சிறந்த நாவலாசிரியராயும், சிறுகதை எழுத்தாளராயும் நல்ல கட்டுரையாளராயும் விளங்கினார். அவரது கவிதைகளின் தொகுப்பான கீதாஞ்சலிக்கு 1913ல் நோபல் இலக்கிய பரிசு கிடைத்தது. முதலில் வங்க மொழியில் இதனை எழுதிய தாகூர் தாமே இதனை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தார்.



தாகூர் அப்பழுக்கற்ற தேச பக்தர். நம் தேசப்பிதாவான காந்திஜீயை முதலில் 'மகாத்மா' என இவர் கூறி அழைத்ததால் அந்தப் பட்டமே காந்திஜீக்கு நிலைத்துவிட்டது. நாட்டுப்பற்று மிகுந்த தாகூர் சாந்திகேதனத்தில் 'விஸ்வபாரதி' என்ற பல்கலைக்கழகத்தை நிறுவினார். இங்கு தேசீய நோக்குடன் இந்தியப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு கல்வி புகட்டப்படுகிறது. தாகூர் வங்க இலக்கியத்திற்கு மேலும் புதுமெருகு கொடுத்தவர். இவர் 1941 ஆகஸ்ட் 7ந் தேதி அமரரானார்.

இவரது கவிதை ஒன்று இன்றும் பள்ளிகளில் மாணவர்களுக்கு அறிவுரையாக பிரார்த்தனை வேளையில் கூறப்படுகிறது. இதன் கருத்து வருமாறு: பயமற்ற அறிவுடன் தலை நிமிர்ந்தும், சுதந்திரச் சிந்தனையும், குறுகிய மனப்பான்மையில் உலகம் பல பிரிவுகளாக ஆகிவிடாமல், உண்மையின் அடிப்படையில் சொற்களைக் கூறவும், அயராத உழைப்பால் முழுமையை அடையவும், பழம்கால மூட பழக்க வழக்கங்களில் மூழ்கி அறிவு சிதறி விடாமலும், என்றென்றும் முன்னேறிக் கொண்டிருக்கும் அறிவையும் செயற்பாட்டையும் அளித்து எம் நாடு சுதந்திரமாகிய சொர்க்க போகத்தை அடைய நீ அருள்வாயாக''

இந்தப் பொன்மொழிகள் இளைஞர் மனதில் பசும்மரத்து ஆணிபோல் நன்கு பதியவை.



# ஞானசூன்யம்!

அது குளிர்கால இரவு. கிராமக்காவல்காரன் கந்தப்பன் ''திருடர்கள் ஜாக்கிரதை'' என்று குரல் கொடுத்தவாறே தெருத் தெருவாகச் சுற்றி வந்தான். இரு முறை ஊரை சுற்றி வந்தாகிவிட்டது. ஜமீன்தாரர் வேறு அக்கிராமத்தில் முகாமிட்டிருந்ததால் பொழுது விடியும்வரை கண் விழித்து அவன் தன் வேலையை கவனமாகச் செய்தாக வேண்டும். குளிர் மிக அதிகமாக இருந்ததால் உடம்பைக் கதகதப்பாக வைத்துக் கொள்ள அவன் சுருட்டுக் குடிக்க எண்ணித் தன் சட்டைப் பையிலிருந்து சுருட்டையும் எடுத்தான். ஆனால் அதைப் பற்ற வைக்க அவனிடம் நெருப்புப் பெட்டி இல்லை. எங்காவது நெருப்பாவது கிடைக்குமாவென்றால் எல்லா வீட்டுக் கதவுகளும் மூடப்பட்டுக் கிடந்தன.

சற்று தூரத்தில் தென்பட்ட ஒரு குடிசைக்கு முன் போய் நின்று அவன் குரல் கொடுக்கவே குடிசைக்குள்ளிருந்து கதவைத் திறந்து கொண்டு எட்டிப்பார்த்த கிழவி ''பாராக்காரரா? என்னப்பா வேண்டும்?'' என்று கேட்டாள். கந்தப்பனும் ''பாட்டி! வீட்டு அடுப்பில் நெருப்பு இருக்கிறதா? இந்த சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்கிறேன்'' என்றான். அவளோ ''இரண்டு நாளாக நான் அடுப்பே மூட்டவில்லை. கோயில் பிரசாதத்தையும் சத்திர சாப்பாட்டையும் தின்று காலம் கழித்து வருகிறேன்'' என்று கூறிக் கதவை மூடிக் கொண்டு போய் விட்டாள்

கந்தசாமி இன்னொரு வீட்டு வாசல் முன் நின்று குரல் கொடுக்கவே அந்த வீட்டுக்காரர் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்.

சுவா.வெங்கடராமன்

அவரிடம் அவன் ''ஐயா! நெருப்புப் பெட்டி இருந்தால் கொஞ்சம் கொடுங்கள். சுருட்டு பற்ற வைத்துக் கொண்டு விட்டுத் தந்து விடுகிறேன்'' என்றான். அவரும் ''நெருப்புப் பெட்டி இல்லை. இன்றிரவு அடுப்பு மூட்டக் கூட அடுத்த வீட்டிலிருந்து நெருப்பு வாங்கி மூட்டினோம். சமையல் முடிந்ததும் நெருப்பையும் அணைத்துவிட்டோம்'' என்று கூறிய வாறே வீட்டிற்குள் போய் விட்டார்.

கந்தப்பன் அங்கிருந்து வேறொரு வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டி னான். யாருமே எழுந்து வரவில்லை. எல்லோரும் நன்கு தூங்கிக் கொண்டி ருந்தார்கள். அவன் சுற்றிலும் பார்த் தான். சற்றுதூரத்தில் ஜமீன்தாரர் முகாமிட்டிருக்கும் மாளிகை தென் பட்டது. அங்கு சென்றால் ஜமீன் தாரரின் வேலையாட்களில் யாராவது ஒருவனாவது நெருப்புப் பெட்டி வைத்திருப்பான் என எண்ணி கந்தப்பன் ''திருடர்கள் ஜாக்கிரதை'' என்று கூவியவாறே அங்கு சென்றான்.

அம் மாளிகையின் முன் பகுதியில் ஜமீன் தாரரின் திவான் அமர்ந்து ஒரு பணி யாளனிடம் ஏதோ பேசிக் கொண்டி ருந்தார். கந்தப்பனின் குரல் கேட்டு அவனைப் பார்த்து ''பேஷ் உன் வேலை யை ஒழுங்காகச் செய் கிறாயே! இந்தக் கடும் குளிரில் கூட பாராக் கொடுக்கிறாயே!'' என்று பாராட்டினார். அப்போது கந்தப்பன் பணிவுடன் ''அது என் கடமை ஆயிற்றே. குளிர் சற்று அதிகமே. அதனால் உடம்பு கதகதப்பாக இருக்க சுருட்டுப் பிடிக்க நினைத்தேன் ஆனால் என் துரதிர்ஷ்டம் யாரிடம் கேட்டாலும் நெருப்புப் பெட்டியோ அல்லது நெருப்போ கிடைக்கவில்லை. இங்கு யாரிடமாவது கேட்டுப் பார்க்கலாமென்று வந்தேன்'' என்று கூறித் தன் கையிலிருந்த விளக்கை யும் தடியையும் கீழே வைத்து விட்டு அவரை வணங் கினான்.

அது கேட்டு திவான் பலமாகச் சிரித்து ''கந்தப்பா! என்ன ஞான சூன்யமடா நீ! உன்னிடமே நெருப் பை வைத்துக் கொண்டு அதற்காக ஊரெல்லாம் சுற்றி வருகிறாயே. இதோ எரிந்து வெளிச்சம் தரும் உன் விளக்கில் நெருப்பு இருப்பது கூட உனக்குத் தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

''ஆமாம்! இது எனக்குத் தெரியாமல் போயிற்றே'' என்று கூறி அசட்டுச் சிரிப்பு சிரித்தான் கந்தப்பன்.






# தங்கசிம்மாசனம்

(5)

[கௌண்டனிய நாட்டு இளவரசன் விஜய தத்தனுக்கும் மாதவசேனனின் மகள் ஸ்ரீலேகாவிற்கும் விவாகம் நடைபெற்றது. ராஜ குரு கூறியபடி நகருக்கு வெளியே புதையலுக்காகப் பள்ளம் தோண்டப்பட்டது. அதிலிருந்து சர்ப்பம் கேட்ட கேள்விக்கு விஜயன் சரியான விடையளிக்கவே அது மலர் மாலையாக மாறி அவன் கழுத்தில் விழுந்தது. பள்ளத்தில் ஒரு அதிசய தங்க சிம்மாசனம் கிடைத்தது. விஜயனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டும் நாளன்று அவன் சிம்மாசனத்தில் ஏற அதன் படிக்கட்டில் கால் வைத்தபோது ஒரு குரல் 'நில்'லென்று கூறி அவனைத் தடுத்தது. அதன் பிறகு-]

விஜயதத்தன் அக்குரல் கேட்டு திகைத்து நின்றான். வேத மந்திரம் ஓதுவதும் இன்னிசையும் நின்றன. அந்த தர்பார் மண்டபம் நிசப்தமாய் ஊசி போட்டால் அந்த ஒலி கேட்கும் அளவிற்கு இருந்தது. இரண்டொரு நிமிடங்களில் தன்னைச் சமாளித்துக் கொண்ட விஜயன் கம்பீரமாக ''யார் நீ? இந்த சுபமுகூர்த்தத்தில் அபசகுனமாகத் தடுத்து ஏன் நிறுத்துகிறாய்?'' என்று கேட்டான்.

சபையோர் யாவரும் விஜயனின் கேள்விக்கு என்ன பதில் கிடைக்கப் போகிறதென்று ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது முன்பு ஒலித்த அதே இனிய குரல் ''விஜயதத்தா! நான் இந்த தங்க சிம்மாசனத்தின் படிக்கட்டின் முதல் படியில் வலது புறத்தில் நிற்கும் பதுமை. நான் தான் உன்னை நிற்கச் சொன்னேன்'' என்றது. அது கேட்டு ஒரு பதுமை பேசுகிறதே என்று எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

அப்போது விஜயன் அப்பதுமை



யை வணங்கி ''தேவீ! சக்தி மாதா! நான் சற்றுத் துடுக்காகக் கேள்வி கேட்டு விட்டேன். அதற்காக என்னை மன்னித்து விடு. இச் சிம்மாசனத்தில் பொறிக்கப் பட்டுள்ள எங்கள் குலதேவதையின் உருவம் காரணமாக இந்த சிம்மாசனம் எங்கள் பரம்பரைச் சொத்து என்று எண்ணிவிட்டேன். ஆனால் நீ நில்லெனக் கூறி என்னைத் தடுத்ததால் என் மனதில் பல வினாக்கள் எழுகின்றன. இந்த சிம்மாசனம் யாருடையது? பயங்கர சர்ப்பம் கேட்ட வினாவிற்குச் சரியான விடை கூறி இதை நான் அடைந்தேன். ஆனால் இதில் அமர நான் ஏறியபோது என்னைத் தடுத்து விட்டாய். இதன் நோக்கம் என்ன?'' என்று கேட்டான்.

பதுமையும் ''விஜயா! உன் பணிவு என்னை மிகவும் கவர்ந்து விட்டது. இந்த சிம்மாசனத்தை உருவாக்கியவரின் நோக்கம் உன்னால் நிறைவேறுமென நான் நினைக்கிறேன். நீ கேட்ட கேள்விகளுக்கும் விளக்கமாய் விடை கூறுகிறேன். கேட்டுக்கொள்'' எனக் கூறி இவ்வாறு சொல்லலாயிற்று.

பலநூறு ஆண்டகளாக பூமிக்குள் புதைந்து கிடைத்த இந்த சிம்மாசனம் உங்கள் வம்சத்திற்கே உரியதுதான். வெகுகாலத்திற்கு முன் உங்கள் வம்சத்தில் மிகவும் புகழ்பெற்ற மன்னனான சாரஸ்வதன் தென்னிந்திய நாடுகளை வென்று சக்கரவர்த்தி ஆனது உனக்குத் தெரிந்ததுதானே. அவனுக்குக் குழந்தையே பிறக்காததால் அவன் இறந்ததும் அவனது தம்பியின் மகன் ஹயக்கிரீவன் மன்னனானான். ஆனால் அவன் திறமையற்றவன். அவனது குற்றங் குறைகளை அவனது குரு புலிந்த பட்டார்க்கர் மறைத்து வரலானார். மந்திரதந்திரங்கள் கற்ற அவர் ஹயக்கிரீவனுக்கு உறுதுணையாக இருக்கலானார். அவர்தாம் ரத்தினங்களையும் தங்கத்தையும் கொண்டு ரகசியமாக இந்தச் சிம்மாசனத்தை உருவாக்கினார்.

இது தயாரானதும் பட்டார்க்கர் தம் மந்திர சக்தியால் சக்திகளடங்கிய மூன்று பதுமைகளை வலது புறத்திலும், இடது புறத்தில் சாதாரண மூன்று பதுமைகளையும்

இருக்கச் செய்தார். வலப்புறப் பதுமைகள் மூன்றிலும் சத்தியம், தர்மம், நியாயம் என்ற சக்திகளை முறையே புகச் செய்தார். நான் சத்திய சக்தி கொண்ட பதுமை. எனக்கு அடுத்து உள்ள பதுமையில் தர்மமும் அதற்கடுத்த பதுமையில் நியாயமும் சக்திகளாக உள்ளன. எம் மூன்று பதுமைகளுக்கு எதிரே இருக்கும் பதுமைகள் எமக்கு உதவுபவை.

சத்தியம், தர்மம், நியாயம் ஆகிய மூன்றையும் சரியாகக் கடைப் பிடித்து ஆட்சி புரிபவனே நல்ல மன்னன். ஒரு நாட்டின் ஆட்சி நிலைத்திருப்பதற்கு இம் மூன்றும் மிக மிக அவசியம். இவற்றைக் கடைப்பிடிக்கும் மன்னனும் உறுதி யான உள்ளம் கொண்டவனாக இருக்க வேண்டும். இம் மாதிரியான மன்னன் உங்கள் வம்சத்தில் சாரஸ்வதன். ஹயக்கிரீவன் தன் பெரியப்பா மாதிரி இல்லாததால் அவனுக்குத்துணையாக இருக்கவே பட்டார்க்கர் எங்களை நிறுவினார்.

ஆனால் விதியின் விளை யாட்டை என்னென்பது! இந்த சிம்மாசனத்தைச் செய்து முடிக்கும் போது ஹயக்கிரீவன் இறந்தான். இது புலிந்தக பட்டார்க்கருக்குப் பேரிடியாகப்பட்டது. சன்னியாசி யாகிக் காட்டிற்குப் போய் விடலாமா என்று எண்ணலானார். ஆனால் ரகசியமாகத் தயாரிக்கப் பட்ட தங்க சிம்மாசனத்தை என்ன செய்வது என்ற பிரச்சினை



எழுந்தது. திறமையற்ற ஹயக்கிரீ வனுக்காக செய்யப்பட்ட அச் சிம்மாசனத்தை ஏதோ வம்ச பரம் பரைச் சொத்து போல அவனது பின் சந்ததியாருக்குக் கொடுத்து விட அவருக்கு மனமில்லை.

இதற்கு என்ன வழி என்று அவர் யோசித்தார். ஆம் இந்த சிம்மாசனம் யாருக்காவது கிடைக்க வேண்டுமானால் அவன் திறமை மிக்க அரசனாகத்தான் இருந்தாக வேண்டும். அவன் சாரஸ்வத மன்னனைப் போலப் பெயரும் புகழும் பெற்றிருக்க வேண்டும். அப்படி நடந்தாலே அந்த மன்னனின் பெயரும் இந்த சிம்மாசனத்தை உருவாக்கியவர் பெயரும் உலகில் நிலைத்து



போகிறோம். கதையை முடித்து நாங்கள் ஒவ்வொருவரும் கேள்விகளைக் கேட்போம். என் கேள்விகளுக்கு சரியான பதில் சொல்லி விட்டால் நீ இரண்டாவது படிக்குச் செல்லலாம். அப்போது அங்குள்ள பதுமையும் ஒரு கதையைச் சொல்லி உன்னிடம் கேள்விகள் கேட்கும். அவற்றிற்கு நீ சரியான பதில் கூறினால் மூன்றாவது படியில் ஏறலாம். அங்குள்ள பதுமையும் ஒரு கதையைச் சொல்லி உன்னிடம் கேள்விகள் கேட்கும். அவற்றிற்கும் நீ சரியான பதில்களைச் சொல்லி விட்டால் நீ போய் இச்சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி புரியலாம். இக் கேள்விகளுக்கு நீ சரியான விடைகளைக் கூறா விட்டால் உன் கழுத்தில் இப் போதுள்ள மாலை மறைந்து போய் விடும். இந்த சிம்மாசனமும் முன்பிருந்த இடத்திற்கே போய் விடும்''.

நிற்கும். அதனால் பட்டார்க்கர் தம் மந்திர சக்தியால் இச்சிம்மாசனத்தை பூமிக்குள் மறைந்திருக்கச் செய்தார். அதற்குக் காவலாக ஒரு கால சர்ப்பத்தையும் நியமித்து அதற்கு ஒரு கடினமான கேள்வி கேட்கும் சக்தியைக் கொடுத்து அக் கேள்விக்குச் சரியான விடை அளிப்பவனுக்கே இந்த சிம்மாசனம் கிடைக்க வேண்டும் என்று ஏற்பாட்டைச் செய்தார். அதற்குப் பின்னும் அவர் சில பரீட்சைகளையும் வைக்கச் சொல்லி இருக்கிறார். அவர் வைத்துப் போன பரீட்சைகளில் முதலாவதில் நீ இப்போது தேறி இருக்கிறாய். இனி பதுமைகளாக உள்ள நாங்கள் மூவரும் ஆளுக்கு ஒருவராகக் கதை சொல்லப்

முதலாவது பதுமை இதனைக் கூறி முடித்ததும் சபையில் இருந்தவர்கள் இதென்ன ஒரு புதிய சங்கடம் என எண்ணித் திகைத்தார்கள். ஸ்ரீதத்தனும் தன் மகன் அந்த சிம்மாசனத்தில் அமர இவ்வளவு இடையூறுகளா என்று எண்ணிக் கவலைப்படலானான். ஸ்ரீலேகாவும், ராஜகுரு சிவானந்தரும் விஜயதத்தன் அப்பதுமை கூறியதற்கு என்ன பதில் சொல்லப் போகிறான் என்று எதிர் பார்த்து நின்றார்கள்.

விஜயதத்தனோ பதுமை கூறியது

கேட்டு மனம் இடிந்து போய் விடவில்லை. அவன் தந்தையைப் பார்த்து ''தந்தையே! இனிநான் மேற்கொண்டு செய்யப் போவதற்கு உங்கள் அனுமதியும் ஆசிகளும் தேவை. இப்பரீட்சைகளில் நான் வெற்றி பெற வேண்டுமென்று என்னை வாழ்த்துங்கள்'' என்று வேண்டினான். ஸ்ரீதத்தனும் மகிழ்ந்துபோய் ''மகனே! நீ உன் எல்லா முயற்சிகளிலும் வெற்றி பெறுவாயாக!'' என்று வாழ்த்தினான்.

அப்போது விஜயதத்தன் தங்க சிம்மாசனத்தின் முதல் படியிலுள்ள பதுமையை வணங்கி ''தாயே! சத்திய தேவியே! நீ வைக்கப்போகும் பரீட்சைக்கு நான் தயாராக இருக்கிறேன்'' என்று கூறினான். அப்போது அப்பதுமை ''விஜய தத்தா! உன் துணிச்சலுக்கும் மன உறுதிக்கும் என் பாராட்டுக்கள். இனி நான் கதையைச் சொல்கிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்கு முன் திரிபுராந்தக நாட்டை காலகேது என்பவன் ஆண்டு வந்தான். அவன் ஒரு வடிகட்டின முட்டாள். அவனுக்குச் சுயமாகச் சிந்திக்கவும் தெரியவில்லை. அறிஞர்களின் யோசனைகளையும் அறிவுரைகளையும் கேட்க வேண்டும் என்றும் அவன் அறிவுக்குத் தோன்றவில்லை. சிம்மாசனத்தில் அமர்ந்த தான் கடவுளுக்குச் சமம் என்றும்



தான் கூறுவதே வேத வாக்கு என்றும் அவன் எண்ணி நாட்டை ஆள முயன்றதால் நாட்டின் நிலை சீர்கேடடைந்து விட்டது. சரியான மழை வேறு பெய்யாது போனதால் உணவு தானிய உற்பத்தி மிகவும் குறைந்து போயிற்று. கலைத் துறையில் ஓவியர்களுக்கும் சிற்பிகளுக்கும் மட்டுமே அரசாங்க ஆதரவு ஒரு சிறிது கிடைத்து வந்தது. கவிஞர்களுக்கும் பண்டிதர்களுக்கும் அரசாங்க ஆதரவு என்பது குதிரைக் கொம்பாகி விட்டது. புகழ் பெற்ற கவிஞர்கள் அந் நாட்டை விட்டு வேறு நாடுகளுக்குச் சென்று விட்டனர். அவர்களுக்கு அந்நாட்டு அரசர்கள் நல்ல வரவேற்பளித்து ஆதரவும் காட்டி வருகிறார்கள்



என்ற செய்திகளைக் கேட்ட காலகேது ''சீச்சீ! இதென்ன! நம் நாட்டவர்கள் பிற நாடுகளுக்குப் போய் அங்கு கையேந்திப் பிழைப் பதா? இது நம் தாட்டிற்கே பெருத்த அவமானம். இதைத் தடுத்து நிறுத்த வேண்டும்'' என்று எண்ணி தன் நாட்டு எல்லையைக் கடந்து யாரும் வெளியே போகக் கூடாது என்று உத்திரவு போட்டு எல்லைப் புறத்தில் காவலையும் பலப் படுத்தினான்.

கவிஞர்கள் இருந்தால் தானே இந்தத் தொல்லை! அவர்கள் இல்லாமலே செய்துவிட்டால் பிரச்சினை தீர்ந்தது என்று காலகேது எண்ணி இனி தன் நாட்டில் யாருமே கவிதை புனையவோ, படிக்கவோ அல்லது கேட்கவோ கூடாது என்று சட்டம் போட்டு விட்டான். அச்சட்டத்தை மீறுபவர்களுக்குக் கடும் தண்டனை விதிக்கப்படும் என்றும் அவன் எச்சரிக்கை விடுத்தான்.

காலகேதுவின் இந்த சட்டத்தால் பலருக்கும் மனவேதனை ஏற்பட் டது என்றாலும் மிக அதிகமாக மனவருத்தப்பட்டவள் அவனது பட்டத்து ராணி ஹைமாவதிதான். அவள் தன் தாய்மொழியிலும் சம்ஸ்கிருதத்திலும் நல்ல புலமை பெற்றவள். கவிதைகள் புனைப வள். தன் கணவனின் அறிவின்மை காரணமாக அவள் தன் உணர்ச்சி களை எல்லாம் அடக்கி வைத்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. இலக்கியத்துறையில் மட்டும் அவளுக்கு இந்தக் கட்டுப் பாடு என்பதல்ல, சொந்த வாழ்விலும் நிம்மதி இருக்கவில்லை. அவளுக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. மேலும் அவளுக் குப் பிறகு காலகேது மேலும் இரு பெண்களை மணந்து கொண்டு விட்டான். ஆனாலும் அவன் தன் மூன்று மனைவிகளையும் வேலைக் காரிகளைப் போல நடத்தி வந்தான். மூவருக்குமே குழந்தை எதுவும் பிறக்காததால் அவன் அவர்களை அலட்சியம் செய்து வந்தான்.

இப்படியாக நாட்கள் கழிய லாயின. மழைவேறு தொடர்ந்து இரு ஆண்டுகளாகப் பெய்யாது போனது நிலைமையை மேலும்

மோசமாக்கியது. வயல்கள் வறண்டு போயின. பயிர்களுக்கு நீர் பாய்ச்ச எவ்வித ஏற்பாடும் செய்யப்படவில்லை. களஞ்சியங்களில் சேர்த்து வைக்கப்பட்ட உணவுதானியங்கள் கூடத்தீர்ந்து போயின. இதனால் காலகேது அயல் நாடுகளிலிருந்து உணவுதானியங்களை விலைக்கு வாங்கி அரசாங்க அதிகாரிகள் வாயிலாக விற்பனைக்கு ஏற்பாடு செய்தான்.

இந்த நிலையில் பெரும் பணக்காரர்கள் நிறைய விலை கொடுத்து உணவுதானியங்களை வாங்கி வைத்துக் கொண்டார்கள். ஏழைகளுக்கு அவை கிடைக்காமல் போகவே நாட்டில் திருட்டும் வழிப்பறிகளும் கொள்ளைகளும் அதிகரித்தன. அரசாங்க அதிகாரிகள் லஞ்சம் வாங்கிக் கொண்டு தமக்கு வேண்டியவர்களுக்கு மட்டும் உணவு தானியங்களைக் கொடுத்தார்கள். இப்படி திருட்டுகள் அதிகரிக்கவே அரசாங்கத்திலிருந்தே பெருத்த அளவில் பணம் திருட முகமூடி அணிந்த ஒருவன் தலைமையில் ஒரு கூட்டமே இயங்கி வந்தது.

அந்த முகமூடித்திருடனைப் பற்றி பலகதைகள் மக்களிடையே பரவின. அவன் பெயர் சித்திரரதனாம். திரிபுராந்தக நாட்டின் பெயர் பெற்ற தெய்வமான சித்திரரதரின் அருளால் அவனது தாய் தந்தைக்கு அவன் பிறந்தவனாம். சண்டையில் அவனை யாராலும் வெல்ல முடியாதாம். அவன் திருடனாக ஏன் எப்போது மாறினான் என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் அவனை ஏழை எளிய மக்கள் புகழ்ந்து வந்தார்கள். ஏனெனில் அவன் தான் கொள்ளையடித்த பணத்தையும் உணவுதானியத்தையும் ஏழைகளுக்கே பகிர்ந்து கொடுத்து வந்தான். இதனால் மக்கள் அவனை சித்திரரத சுவாமியின் மறு அவதாரம் எனப் போற்றிப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

இப்படியாக நாட்கள் கழிந்து கொண்டிருக்கையில் ஒரு அதிசயச் சம்பவம் நிகழ்ந்தது.

(தொடரும்)



## 4. புனித நதி தோன்றிய கதை

அன்று ஞாயிறு. சியாமளா காலையிலேயே தன் தாத்தாவின் அறைக்குள் சென்றாள். அப்போது சோமநாதர் அன்றைய செய்தித்தாளைப் படித்துக் கொண்டிருந்தார். சியாமளாவின் பின்னாலேயே சேகரும் வந்து'' தாத்தா ! எனக்கு தான் முதலில் கதை சொல்ல வேண்டும்'' என்றான். சோமநாதரும் தன்னிடமிருந்த செய்தித்தாளை அதற்காக வந்த தன் மகன் ஸ்ரீதரிடம் கொடுத்து விட்டு சேகரிடம் ''உனக்கும் சியாமளாவுக்கும் சேர்த்தே கதை சொல்கிறேன். கங்கை நதி புனிதமானது என்பதற்கு இன்னொரு கதை இருக்கிறது என்றேனல்லவா? உங்களுக்கெல்லாம் தெரியுமே? நம் நாட்டுக் கலாசாரம் மிகவும் உயர்ந்திருப்பது போல நம் நாட்டின் வடக்கேயுள்ள இமய மலையும் உலகிலேயே மிகவும் உயரமானது. இமயமலைப் பகுதியில் பல அதிசயங்களையும் அற்புதங்களையும் இன்றும் காணலாம். விஞ்ஞானிகளும் ஆராய்ச்சியாளர்களும் அதில் பல புதிய விஷயங்களைக் கண்டு நமக்குத் தெரியப்படுத்தியுள்ளார்கள். விந்தையான உலகங்களை அதில் காணலாம் எனவும் அவர்கள் கூறி இருக்கிறார்கள்'' என்றார்.

சியாமளாவும் ''விந்தையான உலகங்களா? இமயமலையிலா உள்ளன? அவையாவை'' என்று ஆவலுடன் கேட்டாள். சோமநாதரும் ''நாம் தற்போது உலகில் அனுபவிக்கும் சுகங்கள் கொண்டது தான் உலகம் என்று எண்ணினால்



பாரதீயன்



அது சரியல்ல. நம் கண்ணுக்குப் புலப்படாத உலகங்கள் பல உள்ளன. ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் பல உலகங்கள் இருக்க முடியும்'' என்றார்.

அப்போது சேகர் ''தாத்தா! கண்ணுக்குத் தெரியாத உலகங்கள் என்று கூறினீர்களே அவை பற்றி நாம் எவ்வாறு அறிந்து கொள்வது?''

என்று கேட்கவே சோமநாதரும் ''என் மனம் என்பதை உன்னால் காண முடிகிறதா? இல்லையே அதனால் மனம் என்று ஒன்று இல்லவே இல்லை என்று கூறிவிட முடியுமா? மனம் என்பதை நாம் உணர்ந்துதானே கண்டு கொள்கிறோம். இது போலத்தான் கண்ணுக்குப் புலப்படாத உலகங்களை நம் ரிஷிகளும் முனிவர்களும் உணர்ந்து கண்டிருக்கிறார்கள். சரி இனி புனித கங்கை தோன்றிய விதம் பற்றிக் கூறுகிறேன்'' என்று கூறி இவ்வாறு ஆரம்பித்தார்.



ஒரு முறை நாரதர் பூவுலகிலிருந்து மகாவிஷ்ணு இருக்கும் வைகுண்டலோகத்திற்கு போய்க் கொண்டிருந்தார். அவர் தம் மஹதீ என்ற வீணையை மீட்டி இன்னிசை பொழிந்தவாறே இமயமலையின் எல்லோராலும் காணமுடியாத பல உலகங்களைப் பார்த்துக் கொண்டே சென்றார். அன்று பௌர்ணமி இரவு வேளை. ஓரிடத்தில் அழகிய ஆண்களும் பெண்களும் தென்பட்டனர். அவர்களது அழகும் மோகனப் புன்னகையும் அவரை வெகுவாகக் கவர்ந்தன. அவர் அவர்களை காண அவர்களருகே செல்லவே அவர்களும் அவரை வணங்கினார்கள்.

நாரதரும் ''நீங்களெல்லாம் யார்?'' என்று கேட்கவே அவர்களும் ''நாங்கள் ராகராகிணிகள் எனப் படும் கந்தர்வர்கள்'' என்று கூறினார் கள். அவர்கள் சங்கீத தேவதைகள். ஒவ்வொரு ராகத்திற்கும் ஒருவர் அதிபர். அவர்களை உற்றுப் பார்த்த நாரதர் ''அவர்களில் சிலரது கன்னங்களில் காயங்களும்

வேறுசிலருக்கு நெற்றி, மார்புகளில் காயங்களும் உள்ளதைக் கண்டார். அது கண்டு அவர் ''இந்த காயங்கள் உங்களுக்கு எப்படி ஏற்பட்டன?'' என்று கேட்டார்.

அவர்களும் ''இப்படிப்பட்ட



கஷ்டங்களை நாங்கள் அனுபவிக்க வேண்டும் என்பது எங்கள் தலை விதி'' என்று நொந்து கொண்டே கூறினார்கள். நாரதரும் ''அப்படி என்ன நேர்ந்து விட்டது?'' என்று கேட்டார். அவர்களும் ''அதை ஏன் கேட்கிறீர்கள்? பூவுலகில் பலர் தம்மைப் பாடகர்கள் என்று கூறிக் கொண்டு பக்திபாவம் இல்லாமல் ராகங்களைக் கண்டபடி சிதைத்து அபஸ்வரங்களில் பாடுகிறார்கள். அவ்வாறு பாடுவதால் எங்களுக்கு இவ்வாறு காயங்கள் ஏற்படு கின்றன. வாய்ப்பாட்டால் மட்டு மல்ல, இசைக்கருவிகளையும் சரியாக இசைக்காததாலும் எம் உடல்களில் அவர்களது ஒவ்வொரு தவறுக்கும் ஒவ்வொரு காயமாக ஏற்படுகிறது'' என்றார்கள்.

அப்போது நாரதர் ''இந்த காயங்களை குணப்படுத்திக் கொள்ள வழி இல்லையா?'' என்று கேட்க அவர்களும் ''ஏன் இல்லாமல்? பரி பூர்ண இசை ஞானி ராகங்களை முறைப்படி பாடினால் எம் காயங்கள் ஆறிவிடும்'' என்றார்கள். நாரதரும் ''நீங்கள் குறிப்பிடும் பரிபூர்ண இசைஞானி எப்படிப் பட்டவராக இருக்க வேண்டும்?'' என்று கேட்டார். அவர்களும் ''பரிபூர்ண இசைஞானி என்பவர் எல்லா உலகிலும் தேடினாலும் ஒரே ஒருவர் தாம் கிடைப்பார். அவர்தாம் பரமசிவன். அவர் எங்களுக்காக இசை பாடுவார் என்று எதிர்பார்க்க முடியுமா?'' என்றார்கள்.

நாரதரும் ''பரமசிவன் கருணா மூர்த்தி. யார் பிரார்த்தனைக்கும் செவிசாய்ப்பவர்'' என்று கூறி விட்டு அங்கிருந்து கைலாசத்திற்குச் சென்றார். அங்கு பரமசிவனிடம் ராகராகிணிகள்படும் அவஸ்தை யை அவர் விவரமாகக் கூறவே பரமசிவனும் ''நான் பாடத்தயார் ஆனால் அதைக் கேட்க பரிபூர்ண

இசை ரசிகர் ஒருவராவது இருக்க வேண்டும். அப்போது தான் நான் பாடுவேன்'' என்றார். நாரதரும் ''அப்படி பரிபூர்ண ரசிகர்கள் இருக்கிறார்களா?'' என்று கேட்டார். பரமசிவனும் ''எல்லா உலகங்களிலும் தேடினாலும் இருவர் மட்டுமே கிடைப்பார்கள் அவர்கள் பிரம்மாவும், விஷ்ணுவும் மட்டுமே'' என்றார். நாரதரும் சிவனிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து போய் பிரம்மாவையும் விஷ்ணுவையும் கண்டார். அவர்களிடம் பரமசிவன் கூறியதைத் தெரிவிக்கவே அவர்களும் ''ஆஹா! அவரது இனிய கானத்தைக் கேட்க ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்ததே'' எனக் கூறி உடனே கைலாசத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

பரமசிவனார் பாடப் போவது கேட்டு தேவர்களும் யட்சர்களும் கந்தர்வர்களும் கைலாசத்திற்கு வந்து சிவனாரை வணங்கி நின்றார்கள். பரமசிவனாரும் இசை மழை பொழியவே எல்லோரும் ஆடாது அசையாது ரசித்துத் தம்மை மறந்து போயினர். ராகராகிணிகளுக்கு ஏற்பட்டிந்த காயங்கள் மறைந்து போயின. விஷ்ணுவோ மெய்மறந்திருக்க அவரது உடலைச் சுற்றி இருந்த ஒளி அந்த இசையில் உருகிப்பாய்ந்தது. அதைக் கண்ட பிரம்மா உருகி வந்த பிரவாகத்தைத் தன் மண்டலத்தில் பிடித்தார். நீராகி கமண்டலத்தில் அது எவ்வளவு காலமாக பிரம்மாவிடம் இருந்தது என்று யாருக்கும் தெரியாது. அதுதான் புனிதமான கங்கை. அதைத் தான் பகீரதன் பூவுலகிற்குக் கொண்டு வந்தான்.

தாத்தா குழந்தைகளுக்குச் சொன்ன கதையைக் கேட்டு ஸ்ரீதரனும் ''பேஷ், இந்த கங்கை நீர்தான் எல்லோரையும் புனிதமாக்குகிறதா?'' என்று ஆச்சரியப்பட்டான்.

(தொடரும்)



# சொன்னபடி நடந்தாயா?

வண்டியூரின் வள்ளியப்பன் அருகிலிருந்த நகரத்திற்கு சென்றான். அப்போது அங்கு ஒரு தெருவில் ஒரு கூட்டம் இருப்பது கண்டு ஒருவனிடம் ''இங்கே என்ன'' என்று கேட்டான். அந்த மனிதனும் ''அதோ பார்த்தீர்ளா! பட்டைபட்டையாய் திருநீறுபூசிக்கொண்டும் ருத்திராட்ச மாலை அணிந்து கொண்டும் ஒரு யோகி அமர்ந்திருக்கிறாரே. அவர் இமயமலையிலிருந்து இங்கே வந்திருக்கிறார். மந்திர சக்தி வாய்ந்த தாயத்துகளை விற்கிறாராம். தாயத்து ஒன்று ஐந்து ரூபாய் தானாம். இந்த விற்பனையில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு இமயமலையில் ஒரு கோயில் கட்டப்போகிறாராம். நாம் நினைப்பதை எல்லாம் தாயத்து நடத்தி வைக்குமாம்'' என்றான்.

வள்ளியப்பனிடம் ஐந்து ரூபாயே இருந்தது. அவன் தன் ஊரில் வீட்டில் கிணறு வெட்டிக் கொண்டிருந்தான். அதில் நல்லநீர் ஊற்று வர வேண்டுமென்பதற்காக யோகியிடமிருந்து தாயத்து வாங்கிப் போகலாமென அவன் எண்ணினான்.

அப்போது ஒருவன் ''சுவாமி! என் வீட்டில் கொசுவை ஒழிக்க இந்த தாயத்து பயன்படும் என்றீர்களே. தாயத்தை வைத்துக் கொண்டு தான் படுத்தேன். கொசுவும் போகவில்லை. ராத்திரி எல்லாம் கொசுக்கடி தூக்கமே இல்லை'' என்றான்.

யோகியும் ''நான் சொன்னபடி நடந்தாயா? கொசுவலையைக் கட்டிக் கொண்டு அதனுள் படுத்துக் கொண்டு உன் பக்கத்தில் தாயத்தை வைத்துக் கொண்டால் கொசுத் தொல்லை போய்விடும் என்று தானே சொன்னேன். நீ அப்படிச் செய்யவில்லையே'' என்றார்!





# விரோதியல்ல, நண்பனே!

தவளகிரி என்ற நாட்டை தவளசேனன் என்ற மன்னன் ஆண்டுவந்தான். அவன் ஒவ்வொரு ஆண்டிலும் சில நாட்கள் தலைநகரிலிருந்து தன் நாட்டின் ஏதாவது ஒரு பகுதியிலுள்ள ஒரு ஊருக்குப் போய் இருந்து விட்டுத் திரும்பி வருவான். அப்போது அவன் மனைவியும் அவனுடன் செல்வாள்.

ஒரு முறை மன்னன் நீலாசலம் என்ற பகுதிக்குச் சென்று ஒரு ஊரில் தங்கினான். அங்கு சலசலவெனப் பாயும் நதியையும் விதவிதமான மரம் செடிகளையும் அவற்றில் பூத்துக் குலுங்கும் வண்ணமலர்களையும் கண்டு பரவசப்பட்டான். ஒவ்வொரு ஆண்டிலும் அந்தப் பருவகாலத்தில் தான் சில அபூர்வப் பறவைகள் வேறு அங்கு வந்து தங்கி விட்டுச் செல்லுமாம்.

இவற்றையெல்லாம் கண்டு களித்துவிட்டு மன்னன் தன் மனைவியும் தலைநகருக்குத் திரும்பிச் சென்றான். அங்கு அவன் தன் அந்தரங்கப் பணியாளனான பத்திரிஎன்பவனை அழைத்து ''நீ நீலாசலத்திலிருந்து வந்தவன் தானே. நான் அங்கு போய் ஆனந்தமாய்க் காலம் கழித்தேன். அதற்காக உனக்குப் பரிசு'' எனக் கூறி ஒரு பிடி தங்க நாணயங்களைப் பரிசாக அளித்தான்.

பத்திரி நீலாசலத்தில் பிறந்து வளர்ந்தவன். வயிற்றுப் பிழைப்பிற்காகத்தன் சொந்த ஊரைவிட்டுத் தலைநகருக்கு வந்து அரசாங்க வேலையில் சேர்ந்து மன்னனின் நல்மதிப்பையும் பெற்று விட்டான். அவன் நீலாசலப்பகுதியைப்பற்றிப் புகழ்ந்து கூறியதால்தான் மன்னன் ராணியோடு சென்று அங்கு சில நாட்கள் தங்கி இருந்து விட்டு வந்தான்.

பத்திரிக்கு சன்மானம் அளித்ததோடு நில்லாமல் மன்னன் தான் சந்திக்கும் ஒவ்வொருவரிடமும் நீலாசலத்தைப் பற்றிப் புகழ்ந்து

**சிவனார் செல்வன்**




கூறலானனான். அதைக் கேட்டவர்கள் நீலாசலத்திற்குப் போய் இயற்கை அழகையும் வண்ணப் பறவைகளையும் கண்டு மகிழ்ந்தனர். ஒருநாள் மன்னன் பத்திரியிடம் என்னால் நீலாசலத்தின் இயற்கை அழகை மறக்க முடியவில்லை. உனக்கு நீலாசலத்தைப் பெருமைப்படுத்த ஏதாவது யோசனை தோன்றினால் அதைச் சொல்'' என்றான்.

பத்திரியும் ''நீலாசலத்தில் கவிஞர்கள் இருக்கிறார்கள். அங்கு போனால் ஒருவனுக்குக் கவிதை தானே புனையும் சக்தி வந்துவிடும். எனவே நீலாசலம் போய் வந்தவர்களை ஒன்று கூட்டிக் கவிதைப் போட்டி நடத்துங்கள். அதில் நல்ல கவிதை கூறுபவர்களுக்கு முதல் பரிசு அளியுங்கள்'' என்று கூறினான் மன்னனும் ''சரி, நீ சொன்னது போலச் செய்யலாம்'' என்றான்.

பத்திரி இவ்வாறு யோசனை கூறியதற்குக் காரணம் உண்டு. வெகு காலமாகவே தன் கவிதைகளைப் பலர் கேட்க கூற வேண்டுமென்ற ஆசை அவனுக்கு உண்டு. ஒரு முறை அவன் தான் எழுதிய கவிதைகளை ஆஸ்தான கவிஞரிடம் காட்டினான். அவரும் அவற்றைப் படித்துவிட்டு'' உன்னை உண்மையில் எல்லோரும் புத்திசாலி என்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கவிதைகளை யாராவது படித்தால் சிரித்து கேலி செய்வார்கள். மன்னர் கேட்டாலோ உன்னைப் பற்றி மட்டமான அபிப்பிராயமே கொள்வார்'' என்றார். ஆனால் பத்திரியோ தன் கவிதைகள் மிக உயர்ந்தவை என்றும் ஆஸ்தான கவிஞர் பொறாமை காரணமாக அவ்வாறு இகழ்கிறார் என்று நினைத்தான். ஆனால் ஒரு வேளை அவர் கூறுவது உண்மையாக இருந்துவிட்டால் மன்னரின் வெறுப்பிற்கு ஆளாக வேண்டுமே என்று பயப்பட்டான். எனவே எப்படியாவது ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்தால் கூட்டத்தோடு கூட்டமாகத் தன் கவிதைகளைப் படித்துக் காட்டிவிடுவது என்று தீர்மானித்துக் கொண்டான்.

நீலாசலம் போய்வந்தவர்களுக்கான கவிதைப் போட்டி ஒன்று வைக்கப்பட்டது. கவிதைகளைக் கேட்க பெரிய கூட்டமும் கூடியது.

சிறந்த கவிதைக்குப் பத்தாயிரம் வராகன்கள் பரிசு என அறிவிக்கப் பட்டிருந்தது. போட்டியில் கவிஞர் களாகப் பெயர் பெற்றவர்கள் கலந்து கொள்ளக் கூடாது, கவிதை நீலாசலத்தின் அழகைப் பற்றி இருக்க வேண்டும் என்பது நிபந்தனைகள்.

இதனால் புதிதாகக் கவிதை எழுதுபவர்களுக்கு உற்சாகம் ஏற்பட்டது. நீலாசலம் போய் வந்தவர்களெல்லாம் தம் கவிதை களை அப்போட்டியில் கலந்து கொண்டு கூறினார்கள்.

போட்டியின் நடுவராக ஆஸ்தான கவிஞர் இருப்பார் என மன்னன் கூறவே பத்திரி அதனை ஆட்சேபித்து ''அவர் பெரும் கவிஞர். எக்கவிதையிலும் குற்றம் குறை கண்டு சொல்வார். இது சாதாரண ஆரம்பக் கவிஞர் களுக்கான போட்டி. அதனால் நீலாசலத்தைப் பார்த்து வந்துள்ள நீங்களே நடுவராக இருக்க வேண்டும்'' என்று கூறினான். மன்னன் அதுகேட்டு என்ன செய்வ தென யோசிக்கையில் ஆஸ்தான கவிஞரே'' அரசே! தாங்களே நடுவராக இருங்கள். அதுதான்சரி'' என்று கூறினார். மன்னனும் அப் போட்டியின் நடுவராக இருக்கச் சம்மதித்துவிட்டான்.

போட்டி ஆரம்பமாகியது. புதிதாகக் கவிதை எழுதியவர்களின் படைப்புகளைக் கேட்டு ''ஆகா! எவ்வளவு நன்றாக ஏழுதுகிறார் கள்'' என்று எல்லோரும் எண்ணி வியப்படைந்தார்கள். அப்போது




ஆஸ்தானக் கவிஞர் மன்னனிடம் 'அரசே! நீலாசலத்தின் பெருமை கூற பல புது கவிஞர்கள் தோன்றி யுள்ளார்கள். ஒரு முறை பார்த்து விட்டே இவர்களால் இவ்வளவு நல்ல கவிதைகளைக் கூற முடியும் என்றால் அங்கேயே பிறந்து வளர்ந் தவர்கள் எப்படியெல்லாம் கவிதை களைப் பொழிவார்களே! இப்படிப் பட்டவர்கள் போட்டியில் கலந்து கொள்ளக் கூடாது. அப்படி யாராவதுகலந்து கொண்டிருந்தால் அவர்களைப் போட்டியிலிருந்து நீக்கி விட வேண்டும்'' என்றார்.

நீலாசலத்தில் பிறந்து வளர்ந்து கவிதைப் போட்டியில் கலந்து கொண்ட இளம் கவிஞன் பத்திரி ஒருவனே. மன்னனும் ஆஸ்தான கவிஞர் கூறியது சரியே என்று ஏற்றதால் பத்திரியால் எதுவும் பேச

முடியாது போயிற்று. போட்டி முடிந்தது. மிக உயர்ந்ததாக அறிவிக்கப்பட்ட கவிஞருக்குப் பரிசு அளித்ததோடு மன்னன் சில ஆறுதல் பரிசுகளையும் அளித்தான்.

பத்திரிக்கு ஆஸ்தான கவிஞர் மீது கோபம் கோபமாக வந்தது. முன்பு அவர் அவனது கவிதைகளைப் படித்துவிட்டு ''இதை யாராவது கேட்டால் சிரிப்பார்கள்'' என்று கூறியவர்தானே! அதை மனதில் வைத்துக் கொண்டு தன்னைப் போட்டியிலிருந்து அவர் விலக்கிவிட்டார் என்று அவன் எண்ணினான். இதை மன்னனிடம் கூறினால் அவர் ஆஸ்தான கவிஞரை தண்டிப்பார் என எண்ணி மன்னனைக் கண்டு கூறிவிடுவது என்று நினைத்தபோது மன்னனே அவனை அழைப்பதாக ஒரு வீரன் வந்து சொன்னான். பத்திரியும் மன்னனைக் காணச் சென்றான்.

மன்னனும் ''நம் தர்பாரில் உனக்கு நான் ஆதரவு அளிப்பது போல உன்னை ஆதரித்து பேச இன்னும் சிலரும் இருக்கிறார்கள். அவர்களில் ஆஸ்தான கவிஞரும் ஒருவர். அவரால் இன்று ஒரு தர்ம சங்கடமான நிலையிருந்து தப்பி னேன்''

''நீ நீலாசலத்தில் பிறந்து வளர்ந்திருந்தாலும் பல ஆண்டுகளுக்கு முன்பே அங்கிருந்து வந்து என்னிடம் வேலையில் அமர்ந்துவிட்டாய். அதன் பின் நீ அங்கு போகவில்லை. இதற்குள் அங்கு பலமாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. அவை பற்றி நீ அறியாமல் பழைய விஷயங்களையே உன் கவிதையில் புகுத்தினாய். அதில் எவ்வித உயர் கருத்தும் இல்லை. நீ எனக்கு வேண்டியவன் என எண்ணி உனக்குப் பரிசு அளித்தால் உண்மையான கவிஞருக்குப் பரிசு கிடைக்கவிடாமல் செய்வது போலாகிவிடும். எனவே ஆஸ்தான கவிஞர் சாமர்த்தியமாக உன்னைப் போட்டியிலிருந்த நீக்க எனக்கு வழிகாட்டினார்'' என்றான்.

அப்போது பத்திரிக்குத் தன் கவிதையின் தரம் என்ன என்பது புரிந்தது. ஆஸ்தான கவிஞரின் செயலால் தன் அறிவீனம் வெளியாகாது தப்பியதே என எண்ணி அவன் ஆறுதல் அடைந்தான்.



காவேரிக் கரைஓரமாய்...

# திருச்சி தீவு

கருத்து : ஜெயந்தி மகாலிங்கம்
ஓவியம் : கௌதம் சென்



தெப்பகுளத்திலிருந்து தென்படும் மலைக்கோட்டையும் உச்சிப்பிள்ளையார் கோவிலும்

**கா**விரிநதி தென்கிழக்காகப் பாய்ந்து திருச்சி மாவட்டத்தில் நுழைகிறது. ஸ்ரீரங்கத்திற்கு மேற்கேயுள்ள முக்கொம்புவரை காவேரி அகண்ட காவேரியாக அதாவது பிளவுபடாத காவேரியாகப் பாய்கிறது. காவேரியின் இப்பகுதியும் தஞ்சை மாவட்டமும் தென்னிந்தியாவின் நெற்களஞ்சியம் எனக் கூறப்படுகிறது. நெல், கரும்பு, வாழை, வெற்றிலை முதலியன இப்பகுதியில் பயிரிடப்படுகின்றன.

இங்கு கொல்லப்பட்ட திரிசிரன் என்ற ராட்சஸனின் பெயரால் திரசிரபுரம் என இவ்வூர் பெயர் பெற்றபின் திருச்சிராப்பள்ளி என்றாகியது. இப் பெயர் குறுக்கப்பட்டு திருச்சி என்றாகியது. திருச்சி மலைக்கோட்டை மீது ஏறினால் காவிரியும் கொள்ளிடமும் பிரிந்து பாய்வதைக் காணலாம். மலைக்கோட்டை 83மீ உயரமான மிகப்பெரிய பாறைமீதுள்ளது. இப்பாறை 38,000 லட்ச ஆண்டுகளுக்கு முந்தையதாம். உலகின் மிகப்பழமையான பாறைகளில் இதுவும் ஒன்று. கி.மு.2வது நூற்றாண்டுகளுக்கிடையே சோழர்கள் இக்கோட்டையை கட்டினார்


மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையா கோவில்

களாம். அப்போது இது சோழ நாட்டின் தலைநகர் பல போர்களை இந்த மலைக்கோட்டை பார்த்துள்ளது. 1751ல் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுகாரர்களுக்குமிடையே இங்கு நடந்த போர் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. மூன்றாண்டு முற்றுகைக்குப் பின் ஆங்கிலேய தளபதி ராபர்ட்கிளைவ் அப்போது இக்கோட்டையைக் கைப்பற்றினார். இப்போது இக்கோட்டையின் தலைவாசல் மட்டுமே மிஞ்சியுள்ளது.

பாறைமீது உச்சிப்பிள்ளையார் கோவிலும் அதன் அடிவாரத்தில் வேறு சில கோவில்களும் உள்ளன. இதன் தெற்கே பல்லவ குகைக்கோவில்கள் உள்ளன. இங்கு இந்து மதக் கடவுள்களின் விக்கிரகங்கள், கல்வெட்டுகள் முதலியவற்றைக் காணலாம்.

மலைக்கோட்டையிலிருந்து இறங்கும் வழியில் நூற்றுக் கால் மண்டபம் உள்ளது. இதனருகே மாத்ருபூதேஸ்வரக்கோவில் உள்ளது. இதனைத் தாயுமானவர்க கோவில் என்றும் அழைக்கிறார்கள். ரத்னாவதி என்ற கர்ப்பிணியின்


ஸ்ரீ ரங்கநாதர் ஆலயம் பொன் விமானம்

தாயார் பிரசவம் பார்க்கத் தாமத மானபோது இக்கோவிலில் குடி கொண்டுள்ள கடவுள் அவளது தாயின் உருவில் வந்து அவளுக்குப் பிரசவம் பார்த்து விட்டுச்சென்றாராம். அதனால் தான் இக்கடவுளுக்கு தாயுமானவர் என்ற பெயர் ஏற்பட்டதாம். இங்கிருந்த தாயுமானவர் என்ற பக்தர் பாடிய பாடல்கள் பிரபல மானவை.

திருச்சி தீவில்தான் ஸ்ரீரங்கம் உள்ளது. கி.பி.3-4வது நூற்றாண்டில் ஸ்ரீரங்கநாதர் ஆலயம் நிர்மாணிக்கப்பட்டது. இங்கு விஷ்ணு பகவான் ரங்கநாதராக சேஷசயனத்தில் பள்ளி கொண்டிருக்கிறார். இந்த விக்கிரகத்தை ராமர் தம் பட்டாபிஷேகத்தின் போது விபீஷணருக்குப் பரிசாகக் கொடுத்தாராம். இலங்கைக்கு அதனை எடுத்துப் போகையில் அவர் அதை இங்கு கீழே இறக்கி வைத்தாராம். பிறகு அவரால் அதை எடுக்க முடியாததால் அப்படியே விட்டுவிட்டாரம்.


ஸ்ரீரங்கம் கோவிலின் ராஜகோபுரம்

ரங்கநாதர் கோவில் வளாகம் 6,31,000 சதுர மீ. பரப்புள்ளது. இந்தியாவின் மிகப் பெரிய கோவில் இது. பிரதான கோவிலைச் சுற்றி ஏழு பிராகாரங்கள் உள்ளன. வெளிப்பிராகாரம் 834 நீளமும் 742 மீ அகலமுமானது. வெளியிலுள்ள மூன்று பிராகாரங்களில் கடைகளும் வீடுகளும் உள்ளன. இங்குள்ள 21 கோபுரங்களில் ராஜகோபுரம் தான் தென்னிந்தியாவிலேயே மிக உயரமானது. 13 அடுக்குகள் கொண்ட இதன் உயரம் 72மீ. 1987ல் இதன் புணர் நிர்மாணமாகியது.

ஆலயத்தின் முக்கிய மூலக்கோவில் 72மீ நீளமும் 54மீ அகலமுமானது. இங்குள்ள விக்கிரகத்தை கர்ப்பூரம் ஏற்றிக் காட்டும் போது தான் பார்க்க முடியும்.

இங்கு விஷ்ணு பக்தர்களான 12 ஆள்வார்களுக்கும் கோவில்கள் உள்ளன. நாலாயிர திவ்வியபிரபந்தத்தைத் தொகுத்த நாதமுனியின் பிரதான சீடரான ஸ்ரீராமானுஜருக்கும் இங்கு ஆலயம் உள்ளது. நான்காவது

பிராகாரத்தில் ஸ்ரீவேணுகோபாலஸ்வாமி கோயில் ஹோய்சால அற்புதக் கலையில் மிளிர்கிறது. இங்குள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் தான் கவிச்சக்ரவர்த்தி கம்பர் தம் ராமாயணத்தை அரங்கேற்றினார்.



மதுரையையும் தஞ்சையையும் ஆண்ட நாயக்க மன்னர்கள். இக்கோவிலுக்கு ஆபரணங்களையும் மானியங்களையும் அளித்து மதில் சுவரும் கட்டினார்கள். இம்மன்னர்களில் அச்சுதப்பநாயக்கரையும் அவரது முதலமைச்சர் கோவிந்த தீட்சதரையும் இக் கோவிலின் முன்னேற்றத்திற்கு மிகவும் பாடுபட்டாவர்களாகக் குறிப்பிட வேண்டும். இங்கு மார்கழி மாத வைகுண்ட ஏகாதசி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இச்சமயம் பக்கர்கள் போட்டி போட்டுக்கொண்டு சுவாமியின் ரதத்தை வடம் பிடித்து இழுக்கிறார்கள். பங்குனி மாதவாக்கில் உற்சவமூர்ததி இக்கோவிலிலிருந்து உறையூரிலுள்ள நாச்சியார் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு ஏழுநாட்கள் உற்சவத்திற்குப் பிறகு மீண்டும் ஸ்ரீரங்கம் கோவிலுக்குக் கொண்டு வரப்படுகிறது.

காவேரி நதியும் கொள்ளிடமும் திருச்சிக்குக் கிழக்கே சுமார் 15கி. மீ. தூரத்தில் மிகவும் நெருங்கி ஓடுகின்றன. இவற்றை இணைத்து கரிகால் சோழன் கல்லணையை சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன் கட்டினான். இதனால் முக்கொம்பிலிருந்து கல்லணை வரை உள்ள பகுதி நாலா புறமும் காவேரி, கொள்ளிடம் ஆகிய இரு நதிகளின் தண்ணீரால் சூழ்ந்திருப்பதால் இது திருச்சித் தீவு என்றாகியது.



ஆயிரக்கால் மண்டபத்திலுள்ள
அழகிய சிற்பங்கள்



# பசுபதியின் மணம்

இந்திரபுரியை இந்திரசேனன் என்ற மன்னன் ஆண்டுவந்தான். அவனுக்கு விவாகமாகி பல ஆண்டு களுக்குப் பின்னரே அவன் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற் றெடுத்தாள். அதற்கு இந்துமதி என்று பெயரிட்டு அதனை வளர்த்து வர கமலம்மா என்ற வயதான தாதியை யையும் நியமித்தனர்.

குழந்தை இந்துமதியுடன் விளையாட அவள் வயதிலுள்ள குழந்தை ஒன்றுகூட அரண் மனையில் இல்லை. கமலம்மாவின் மகள் மல்லி தன் மூன்று வயதுக் குழந்தையை தன் தாயாரிடம் ஒப் படைத்துவிட்டு இறந்து போனாள். அதனால் கமலம்மா தன் பேரன் பசுபதியை அவ்வப்போது அழைத்துக் கொண்டு போய் இந்துமதியுடன் விளையாட விட்டுவந்தாள். இதனால் அவர்களி ருவரிடையே அன்பு வளர்ந்தது. இருவரும் ஒருவர் மற்றவரைக் பெரிதும் விரும்பினர். இப்படியே வருடங்கள் கழிய இந்துமதி பெரியவளாகிவிட்டாள். அதனால் பசுபதி அந்தப்புரத்துள் செல்லத் தடை செய்யப்பட்டது. மன்னனும் தன் மகளுக்கு ஒரு அரசகுமாரனைத் தேர்ந்தெடுத்து மணம் செய்து விடலாமெனத் தீர்மானித்தான்.

இதை அறிந்த இந்துமதி தன் தாய் தந்தையரிடம் தன் விருப்பத்தைத் தெரிவிக்காமல் தன் தாதியிடம் ''நான் விவாகம் செய்து கொண்டால் பசுபதியைத்தான் மணப்பேன். அப்படி நடக்க இயலாது போனால் நன் என் உயிரை விட்டு விடுவேன்'' என்று கூறினாள். அது கேட்டு கமலம்மா பயந்து போனாள். மெதுவாக அவள் இந்துமதியிடம் ''இதோபார் இந்துமதி! பசுபதி உன்னை மணந்துகொள்ளும் அந்தஸ்தில் இல்லை. அதனால்

கி. சந்தியா



அவனை நீ மணக்க முடியாதே'' என்றாள். இந்துமதியோ ''அந்தஸ் தெல்லாம் வேண்டாம். பசுபதி ரொம்ப ரொம்ப நல்லவன் என் மனதிற்குப் பிடித்தவன். இந்தத் தகுதிபோதும். அதனால் அவனைத் தான் மணந்து கொள்வேன். வேறு யாரையும் நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை'' என்றாள்.

அப்போது கமலம்மா ''அப்படி யானால் ஒரு வேலை செய். இப்போதைக்கு மணம் செய்து கொள்ள விரும்பவில்லை என்று சொல். இதற்கு நான் ஒரு வழி கண்டுபிடிக்கிறேன்'' என்றாள். அவள் தன் பேரனிடம் விஷயத்தைச் சொல்லி ''நீ இந்துமதியை மணக்க வேண்டுமென்றால் நீ அவளது அந்தஸ்திற்கு உயர்ந்ததாக வேண் டும். அதற்கு என்ன வழி என்று பார்'' என்றாள்.. பசுபதியும் ''பாட்டீ! நான் அவளது அந்தஸ்திற்கு உயர்ந்து காட்டுகிறேன்'' என்றான்.

மறுநாளே பசுபதி வீட்டை விட்டுக்கிளம்பி காட்டிற்குள் சென் றான். அங்கு ஒருவன் விசித்திரமான வாத்தியத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு மரத்தடியே உட்கார்ந்தி ருந்தான். அவன் திருதிரு வென்று விழிப்பதைக் கண்டு பசுபதி ''உனக்கு என்ன பிரச்சினை? நீ யாரப்பா?'' என்று கேட்டான். அவனும் ''என் பெயர் ராகம். என் குருவிற்கு நான் மிகுந்த ஈடுபாட்டு டன் பணிவிடை செய்ததால் அவர் எனக்கு இந்த இசைக்கருவியைக் கொடுத்து அனுப்பினார். இதை இசைத்தால் அபஸ்வரங்கள் வெளிப் பட்டு கேட்பவனுக்குத் தலைவலி யைத்தான் உண்டாக்கும். இதனால் எனக்கு எல்லாரிடமிருந்தும் உதையும் அடியும் தான் கிடைத்து வருகிறது. இந்த வாத்தியத்தை என்ன செய்வது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

பசுபதியும் ''கவலைப்படாதே இதை நாம் எப்படியாவது பயன்படுத்திக் கொள்ளலாம். என் கூட வா'' என்று கூறித் தன்னோடு அழைத்துக் கொண்டு கிளம்பினான். அவர்கள் கொஞ்சதூரம் போனதும் ஒருவன் தன் தலையை மணலில் புதைத்துத தலைகீழாக சிரசாஸனம் செய்வது போலிருப்பதைக்

கண்டார்கள். பசுபதி அவனருகே போய் அவனைத் தூக்கி நேராக நிறுத்தி'' யாரப்பா நீ? ஏன் இப்படிச் செய்து கொண்டிருக்கிறாய்- என்று கேட்டான். அவனும் ''நூறடி ஆழத்தில் தங்கச் சுரங்கங்கள் உள்ளன. அவற்றிலிருந்து என் ஒருவனால் தங்கத்தை வெட்டி எடுக்க முடியாதே'' என்றான்.

பசுபதியும் ''அது சரி, பூமிக்குள் உள்ளதைப் பார்க்கும் சக்தி உனக்கு எவ்வாறு கிடைத்தது?'' என்று கேட்கவே அவனும் ''ஒரு மரத் தடியே ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் மீது ஒரு புலி பாயப்போகவே நான் அதைக் கத்தியால் குத்திக் கொன்றேன். முனிவர் இதனால் மகிழ்ந்து எனக்கு இந்த சக்தியைத் தந்தார். இதனால் நான் எப்படிப் பயன்பெறுவது என்று தான் தெரியவில்லை'' என்றான். பசுபதியும்'' கவலைப்படாதே. இது பயன்படும். என்னோடுவா'' என்று கூறி அவனையும் அழைத்துக் கொண்டு கிளம்பினான். அவன் பெயர் பார்வை.

பசுபதி, ராகம் பார்வை ஆகிய மூவரும் கொஞ்ச தூரம் போனதும் ஒருவன் கையில் வில்லை வைத்து நின்று கொண்டிருப்பதைக் கண் டார்கள். வில் மிகச் சிறியது. அதைக் கண்டு பசுபதி பக்கென்று சிரித்தான்.

அவனும் ''சிரிக்காதே, இந்த வில் சிறிதே ஆனாலும் எதிரி எவ்வளவு பலவானானாலும் அவனை அடித்து வீழ்த்தும் சக்தி இதற்கு உண்டு. இதில் அம்பை வைத்து எதிரியை



எங்கு அடிக்க நினைக்கிறோமோ அதை நினைத்து எய்தால் போதும். அந்த இடத்தில் தாக்கி அவனை வீழ்த்திவிடும்'' என்றான். அது கேட்டு பசுபதி ''ஓ! இதற்கு அவ்வளவு சக்தியா? இது உனக்கு எப்படிக் கிடைத்தது? உன் பெயர் என்ன? என்று கேட்டான்.

அவனும் ''என் பெயர் பலம். ஒரு மாந்திரீகன் அப்பாவிகளை காளிதேவிக்கு பலியிட்டு வந்தான். நான் அவனை ஏமாற்றி அவனையே காளிதேவிக்கு பலியிட்டேன். தேவி மகிழ்ந்து போய் இந்த சக்தி வாய்ந்த வில்லை எனக்கு அளித்தாள். ஆனால் இதைப் பயன்படுத்தி நான் எப்படி லாபமடையப் போகிறே னோ? என்று சலிப்புடன் கூறினான். பசுபதியும் ''கவலைப் படாதே. இது



பயன்படும். என்னோடு வா'' என்று கூறி அவனையும் அழைத்துக் கொண்டு மற்றவர்களுடன் கிளம்பி னான்.

அவர்கள் கர்க்கடகன் என்ற ராட்சஸனை கொஞ்ச தூரத்தில் பார்த்தார்கள். அவன் மனிதர்களைப் பிடித்து விழுங்குபவன். அவன் பசுபதியையும் அவனோடு வந்தவர் களையும் பார்த்து பயங்கரமாகக் கத்தினான். பலம் அவனைத்தாக்க நினைக்கையில் ராட்சஸன் அவர் களை அணுகிவிட்டான். பசுபதி ராகத்தின் கையிலிருந்த வாத்தியத் தைப் பிடுங்கி இசைத்தான். ராட்சஸ னுக்கு ஓரே தலைவலி எடுக்கவே அவன் இருகைகளையும் கூப்பி பசுபதியை வணங்கி'' தயவு செய்து நீ வாசிப்பதை உடனே நிறுத்து'' எனக் கெஞ்சினான்.

பசுபதியோ இசைப்பதை நிறுத்தாமல் ''நான் சொல்வதைச் செய்தால் இதை இசைப்பதை நிறுத்துவேன்'' என்றான். ராட்சஸ னும் அதற்கு இணங்கவே பசுபதி அவனைத் தன்னோடு அழைத்துப் போய் பார்வை காட்டிய இடத்தைத் தோண்டச் சொன்னான். அவனும் தோண்டி அங்கிருந்த தங்கக் கட்டிகளை எடுத்து வெளியே குவித்தான். அதன் பின் ராட்சஸனை அங்கிருந்து வெகுதூரம் போய் விடும்படி பசுபதி கூறவே ராட்சஸனும் போய் விட்டான். தங்கக்கட்டிகளை எடுத்துப் போய் பசுபதி இந்திரசேன மன்னனுக்குக் காணிக்கையாக அளித்து ''அரசே! உங்களுக்குத் தேவைப்பட்டால் இன்னும் கூடத் தங்கம் கொடுக்கி றேன். இவர்கள் மூவரும் என் நண்பர்கள்'' என்றான்.

இதன் பின் பசுபதி அரண் மனையில் அரசகுமாரி இந்துமதி யைக் கண்டு அதுவரை நடந்ததை யெல்லாம் கூறினான்.. அச்சமயம் அண்டை நாட்டு மன்னன் இந்திர சேனனுக்கு ஒரு மிரட்டல் செய்தி யை அனுப்பினான். இந்திரசேனன் தன் மகள் இந்துமதியை அவனது மகனுக்கு மணம் செய்து வைப்பதாக வாக்களிக்காவிட்டால் படை எடுக்கப் போவதாக பயமுறுத்தி னான். அதைக் கேட்ட இந்திரசேனன்

நடுங்கினான். ஏனெனில் அண்டை நாட்டு மன்னனின் படைபலமானது. மிகவும் பெரியது.

அரசகுமாரி இந்துமதி தன் தந்தையிடம் பசுபதியின் சக்தியைக் கூறவே இந்திரசேனனும் ''இந்த பசுபதி புத்திசாலியாக இருக்கலாம். ஆனால் இவனுக்கு என்று ஒரு நாடு இல்லையே. நாடில்லாதவனை ஒரு அரசகுமாரி எப்படி மணக்க முடியும்?'' என்று கேட்டான். அப்போது அங்கு வந்த பசுபதி ''அரசே! நான் அண்டை நாட்டு மன்னனைப் போரில் தோற்கடித்து அவனது நாட்டைக் கைப்பற்றி அதன் அரசனாகிக் காட்டுகிறேன். இதற்கு அனுமதி அளியுங்கள்'' என்றான்.

இந்திரசேனனும் உற்சாகமாக '' அவ்வாறே செய். இந்துமதி உன் பட்டத்து ராணியாவாள்'' என்றான். பசுபதி இந்திரசேனனின் சிறுபடையுடன் தன் நண்பன் பலத்தின் சிறியவில்லைக் கேட்டு வாங்கிக் கொண்டு அண்டைநாட்டு மன்னனின் படையை தாக்கச் சென்றான்.

அண்டைநாட்டு மன்னன் பசுபதியின் கையிலிருந்த வில்லைப் பார்த்துச் சிரித்தான். ஆனால் பசுபதி தேவியை தியானித்து வில்லில் அம்பை வைத்து எதிரி மன்னனின் மார்பிற்குக் குறிவைத்து அங்கு தாக்க வேண்டுமென நினைத்து எய்தான். அம்பு அம்மன்னனின் மார்பில் பாயவே அவன் ஆவென அலறியடித்து துடித்து விழுந்து இறந்தான். இதைக் கண்ட அம்மன்னனின் படை சிதறி நாலாபக்கமும் ஓடியது. ''மன்னர் பசுபதி வாழ்க! அவர் கொற்றம் வெல்க!'' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன.

பசுபதியின் துணிச்சலையும் அறிவாற்றலையும் கண்ட இந்திரசேன மன்னன் தன் மகள் இந்துமதியை மணமுடித்து வைத்தான். பசுபதி அண்டை நாட்டின் மன்னனாகி தன் மூன்று நண்பர்களான ராகம், பார்வை, பலம் ஆகியோரைத்தன் அமைச்சர்களாக்கிக் கொண்டு நாட்டை நீண்டகாலம் நன்கு ஆண்டு வந்தான்.



# ஆக்கபூர்வமான போட்டிகள்

ரூ.500/- பரிசு பெற்ற பிப்ரவரி மாதப் பழமொழிக் கதை

# சம்மந்தம் அமையவில்லை!

ஸ்ரீபுரம் கிராமத்து பரந்தாமனின் மகள் சாரதா அவளுக்கு மணவயது வந்ததும் அவளுக்குத் திருமணம் செய்ய எண்ணி பரந்தாமன் தீவிரமாக மணமகனைத் தேடலானான். அப்போது தலைநகரிலுள்ள தன் நண்பன் கோதண்டத்தின் நினைவு அவனுக்க வந்தது. உடனே தலைநகரிலுள்ள அவனது வீட்டிற்கு பரந்தாமன் சென்றான்.

கோதண்டம் பரந்தாமனை அன்புடன் வரவேற்றான். பரந்தாமன் கோதண்டத்திடம் நான் என் மகளை உன் மகனுக்குத் திருமணம் செய்து கொடுக்க நினைக்கிறேன். உன் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான். கோதண்டமும்'' என் மகன் அமெரிக்காவில் இருக்கிறான். எப்போது இங்கு வருவான் என்று தெரியாது. நாங்களும் உன் ஊருக்கு வந்து உன் மகளைப் பார்த்துவிட்டு என் மகனுக்கு விவரம் எழுதுகிறோம். அதன் பிறகு அவன் இஷ்டம்'' என்றான். பரந்தாமனும் அப்படியே செய் என்றான்.

கோதண்டம் இந்த சம்மந்தத்திற்கு ஒப்புக்கொண்டு விடுவான் என்று எண்ணி பரந்தாமன் அகமகிழ்தான். ஆனால் கிராமத்துப் பெண்ணான சாந்தாவை கோதண்டம் தம்பதிகளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் ஜாதகம் பொருந்தவில்லை என்றும் கோதண்டம் பரந்தாமனுக்கு எழுதிவிட்டான்.

கடிதத்தைப் படித்தபின் பரந்தாமன் சற்றும் கவலைப்படாதவன் போல ''அப்பாடா! ஒரு பிரச்சனை தீர்ந்தது. இந்தக் கோதண்டம் எப்படிப்பட்டவனென்று எனக்குத் தெரியும்.

அமெரிக்காவிலுள்ள அவன் மகன் எப்படிப்பட்டவனென்று யாருக்குத் தெரியும். நம் மகள் அங்கு என்னென்ன கஷ்டங்களை அனுபவிக்கிறாளோ என்று வேறு தினமும் நாம் கவலைப்பட்டுக் கொண்டே இருப்போம். நல்ல வேளை அவன் ஜாதகம் பொருந்தவில்லை என்று எழுதியதால் தப்பினேன்' என்று தன் மனைவியிடம் கூறினான்.

ஆமாம்! சீச்சீ இந்தப் பழம் தின்றால் புளிக்கும்!

கே.எஸ். சியாம்.

51. குருக்ஷேத்திரமைதானம்

# மகாபாரதம்

நல்ல இடமாகப்பார்த்து பாண்டவர்களின் படை முகாமிட்டது. நீர்வசதியையும் உலர்த்த மரக் கட்டைகள் கிடைக்கும் இடமாயும் தேர்ந்தெடுத்தார்கள். அதனருகே கோவில்களோ, ரிஷி முனிவர்களின் ஆசிரமங்களோ இருக்கவில்லை. கிருஷ்ணரும், அர்ஜுனனும், அவர்களுக்கு துணை புரியும் மன்னர்களும் அந்த இடத்தைப் பார்வையிட்டுத் திருப்தி அடைந்தார்கள். திருஷ்டத்யும்னனும் சாத்தியாகியும் ஒவ்வொருகூடாரத்தையும் அளவெடுத்து நிர்மாணித்தார்கள். பாண்டவர்கள் படை இருந்த இடத்தைச் சுற்றி ஆழமான அகழிகள் தோண்டப்பட்டன.

படைக்கு உண்ண உணவுக்கான பொருள்களும் குடிநீர் வசதியும் செய்யப்பட்டது. காயமடையும் வீரர்களுக்கு உடனுக்குடன் சிகிச்சை அளிக்க மருத்துவர்களும் தயாராக இருந்தார்கள். கவசங்களும் ஈட்டிகளும், வாட்களும், வில்லம்புகளும் மலையாகக் குவிக்கப்பட்டிருந்தன. தேன், நெய், சாம்பிராணி போன்றவையும் நிறைய சேகரிக்கப்படு வைக்கப்பட்டன. தருமர், ஒவ்வொரு கூடாரத்திற்கும் போய் எல்லா ஏற்பாடுகளும் சரிவர செய்யப்பட்டிருக்கின்றனவா என்றும் பார்த்தார்.

கிருஷ்ணர் ஹஸ்தினாபுரத்திலிருந்து சென்றதும் துரியோதனன், கர்ணன், சகுனி, துச்சாதனன் ஆகியோரை அழைத்து ''எனக்கும் பாண்டவர்களுக்குமிடையே போர் மூண்டு விட வேண்டுமென்பது





தான் கிருஷ்ணரின் விருப்பம். இதற்காக அவர் பாண்டவர்களைத் தூண்டியே விடுவார். நாம் பெருத்த அளவில்தான் போருக்கான ஏற்பாடுகளைச் செய்தாக வேண்டும். எனவே நீங்கள் அனைவரும் சுறுசுறுப்புடன் தான் செயல்பட வேண்டும். குருக்ஷேத்திர மைதானத்தில் கூடாரங்களை அமையுங்கள். நமக்கு வரும் உணவுப்பொருள்களை எதிரிகள் தடுத்து விடக்கூடாது. அதற்கு நல்ல பாதுகாப்பு வேண்டும். எப்பொருளுக்கும் எவ்வித ஆயுதத்திற்கும் குறைவே இருக்கக்கூடாது. கொடிகளும் தோரணங்களும் ஏராளமாகத் தயாரிக்கப்பட வேண்டும். கூடாரங்களுக்குப் போக நல்ல சமமான, கரடு முரடு இல்லாத பாதைகள் போடப்பட வேண்டும். நாளைக்கே நம் படைகள் குருக்ஷேத்திரமைதானத்திற்குப் போய்விட வேண்டும்'' என்றான்.

கௌரவப்படைகள் பெருத்த ஆர்ப்பாட்டத்துடன் ஹஸ்தினாபுரத்திலிருந்து கிளம்பி குருக்ஷேத்திர மைதானத்திற்குச் சென்றன. இதே சமயம் தர்மர் ''போர் மூண்டு விட்டதே. நெருங்கிய உறவினர்களை எல்லாம் போரில் கொல்ல வேண்டி உள்ளதே. இது தர்மமா? நியாயமா?'' என்று கிருஷ்ணரைப் பார்த்துக் கேட்டார். கிருஷ்ணரும் ''நாம் நமக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய நாட்டைக் கேட்டோம். அதைக் கொடுக்க மறுது விட்டார்கள். சமாதானமாகப் போக கௌரவர்கள் தயாராக இல்லை. அதனால் நாம் போர் புரிய வேண்டிய நிலைக்குத் தள்ளப் பட்டிருக்கிறோம் இதில் நம் தவறு எதுவும் இல்லை'' என்றார்.

இதைக் கேட்டு ஆறுதலடைந்த தருமர் போர் மூண்டு விட்டது என்ற அறிவித்தார். பாண்டவ படை வீரர்களின் உற்சாகம் கரை புரண்டோடியது.

துரியோதனனோ தன் பதினோறு அட்செளணி படையைக் கண்டு இவ்வளவு பெரிய படை எனக்கு உள்ளதே என்று பூரித்துப் போனான். தன் படையை அவன் அணி வகுத்து நிறுத்தினான். அவனும் ஈட்டிகள் வாட்கள், வில் அம்புகள் என ஆயுதங்களைச்



சேகரித்து வைத்திருந்தான். தன் படைக்கு சேனாதிபதியாக இருக்குமாறு அவன் பீஷ்மரை வேண்டிய போது அவர் இரண்டு நிபந்தனைகளைக் கூறினார். ஒன்று பாண்டவர்களில் எவரையும் நான் கொல்ல மாட்டேன் என்றது. மற்றது தானும் கர்ணனும் ஒரே போர்களத்தில் ஒரே சமயத்தில் போர்புரியக் கூடாது என்பது.

பீஷ்மர் கூறியதைக் கேட்ட கர்ணன் துரியோதனனிடம் ''இந்த பீஷ்மர் உயிருடன் இருக்கும்வரை நான் போர்க்களத்தில் அடி எடுத்து வைக்க மாட்டேன்'' என்று கூறி விட்டான். துரியோதனனும் அது கேட்டு பதிலெதுவும் கூறவில்லை.

போர் ஆரம்பமாகப் போகிறது என்று கேட்டதும் பலராமர் சில யாதவ வீரர்களைக் கூட்டிக் கொண்டு குருக்ஷேத்திரத்திற்கு வந்து தர்மரைக் கண்டார். அவருக்கு எல்லோரும் மரியாதை அளித்து வரவேற்றார்கள். பலராமர் தன்னைவிட மூத்தவரான விராட மன்னனான துருபதனை வணங்கி விட்டு தனக்கு அளிக்கப்பட்ட ஆசனத்தில் அதர்ந்தார்.

பிறகு அவர் அங்கிருந்தவர்களைப் பார்த்து ''மிகவும் பயங்கரமான போர் ஆரம்பமாகப் போகிறது. உயிச்சேதமும் பொருட் சேதமும் கணக்கிடவே முடியாமல் போய்விடும். இந்தப் போரை நிறுத்த வழி தெரியவில்லை. போரில் நீங்கள் யாவரும் உயிர் தப்பி அங்கஹீனர்களாக ஆகிவிடாமல் பத்திரமாகத்திரும்பி வரவேண்டுமென ஆசிகூறுகிறேன். பாண்டவர்களும் கௌரவர்களும் நமக்கு சமமே என்று கிருஷ்ணனிடம் நான் சொல்லிப் பார்த்தேன். ஆனால் அவனுக்கு அர்ஜுனன் உயிருக்கு சமானம். பாண்டவர்களாகிய உங்களிடம் அதிகப் பாசம் வைத்திருப்பவன். அதனால் நான் என்ன சொல்லியும் கேட்காமல் உங்களையே ஆதரிக்கிறான். பீமனும் துரியோதனும் என் சீடர்களே. இருவரும் எனக்கு பிரியமானவர்களே. என்னிடம் தான் இருவரும் கதாயுதப் பயிற்சி பெற்றார்கள். ஆனால் பாண்டவர்களுக்கு கிருஷ்ணன் உதவி

செய்வதால் அவர்களே வெற்றி பெறுவார்கள். கௌரவர்கள் அழிவதை நான் பார்க்க விரும்ப வில்லை. எனவே நான் புண்ணிய ஸ்தலங்களுக்குப் போய் காலத்தைக் கழிக்கப் போகிறேன்'' என்று கூறி அங்கிருந்து சென்று விட்டார். சற்று நேரத்திற்குப்பின் ருக்மிணியின் சகோதரன் ருக்மி ஒரு அட்சௌணி படையுடன் வந்து பாண்டவர்களைக் கண்டான். தருமர் அவனை வரவேற்றுத் தக்க மரியாதைகளைச் செய்தார். அப்போது அவன் எல்லோரும் கேட்கும்படியாக அர்ஜுனனிடம் ''அர்ஜுனா! இந்தப் போரில் உதவி வேண்டுமென்றால் என்னிடம் கூச்சப்படாமல் கேள். நான் உன் எதிரிகளை நிர்மூலமாக்கி உனக்கு பயமில்லாமல் செய்கிறேன். எனக்கு உள்ள பலம் வேறு யாருக்கும் இல்லை. எந்த மன்ன னும் என்னை எதிர்த்து நிற்க முடி யாது,,என்று கர்வமாகக் கூறினான்.

அர்ஜுனன் எல்லோரையும் ஒரு முறை பார்த்துவிட்டு சிரித்தவாறே ''விராதி வீரரே! நான் பயப்படும் விஷயம் என்று எதுவும் இல்லை. நான் யாருடைய உதவியும் இல்லாமல் துரியோதனனை கந்தர் வகளிடமிருந்து காப்பாற்றினேன். காண்டவ வனத்தை எரிய வைத் தேன். விராடனின் பசுமாடுகளை கௌரவப் படையை நான் ஒருவ னாகவே எதிர்த்து அவர்களிட மிருந்து அவற்றை மீட்டுக்



கொடுத்தேன். நீங்கள் உதவி செய்ய எண்ணினால் வேறு யாருக்காவது செய்யலாமே? அப்படி செய்ய விருப்பம் இல்லாவிட்டால் எங்களோடு சேர்ந்து நின்று நாங்கள் எப்படிப் போர் புரிகிறேன் என்று பாருங்கள்'' எனக் கூறினான்.

இதனால் கோபம் கொண்ட ருக்மி அங்கிருந்து உடனே கிளம்பி விட்டான். அவன் நேராக துரியோதனிடமும் அர்ஜுனனிடம் கர்வமாகக் கூறியது போலவே உதவி புரிவதாகச் சொன்னான். துரியோதனனும் தனக்கு ருக்மியின் உதவி வேண்டியதில்லை என்று முகத்தில் அறைந்தது போலக் கூறி விடவே ருக்மி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான்.



இவ்வாறு குருக்ஷேத்திரத்தில் நடந்த மகாபாரதயுத்தத்தில் கலந்து கொள்ளாதவர்கள் பலராமனும் ருக்மியும் மட்டுமே.

குருக்ஷேத்திர மைதனத்தில் முகாமிட்டிருந்த பாண்டவர்களின் கூடாரத்திற்கு துரியோதனன் சகுனியின் மகன் உலூகனை தூதுவனாக அனுப்பினான். அவன் பாண்டவர்களுக்கும் கிருஷ்ணருக்கும் கர்வத்தோடு அனுப்பிய செய்திபின் வருமாறு:

''தருமரே! நீர் ருத்திராட்சப் பூனை. கண்ணை மூடிக் கொண்டு ஜெபம் செய்வது போலப் பாசாங்கு செய்வாய். உலகை ஏமாற்ற வேதாந்த விஷயங்களைப் பேசி பொறுமையைக் கடைப் பிடிப்பது போல நடிக்கிறாய். இனியாவது நீ க்ஷத்திரியன் என்று உலகிற்குக் காட்டு. வீரத்துடன் போர்புரி. நீ ஐந்து கிராமங்களைக் கேட்டாய். நீ போர் புரிய வேண்டும் என்பதற்காகத்தான் வேண்டுமென்றே அவற்றைக் கொடுக்க முடியாது என்று மறுத்தேன். ஏய் கிருஷ்ணா! நீ ராஜ சபையில் ஏதோ மாயாஜாலம் செய்து ஏதோ ஒரு உருவைக் காட்டினாய். அதே உருவில் நீ போர்க் களத்திற்கு வா. நான் உன்னை எதிர்க்கிறேன். என் வீரர்கள் உன் மாய வேலையைக் கண்டு பயப்படாமல் போர் புரிவார்கள். ஏதோ போரில் கௌரவர்களை வென்று நாட்டை அவர்களுக்குக் கொடுக்கப் போவதாக வீராப்பு பேசினாயே. அதை நிறைவேற்று பார்க்கலாம். ஏய் பீமா! நீ சாப்பாட்டு ராமன். உனக்குப் போர் புரியத் தெரியாது. நான் விரட்டியதால் தானே நீ விராட மன்னனிடம் போய் சமையல் கா்ரனாக வேலைக்கு அமர்ந்தாய். திருதராஷ்டரரின் புதல்வர்கள் அனைவரையும் போரில் கொன்று விடுவதாகப் பெருமை அடித்துக் கொண்டாயே. அதை நிறைவேற்று பார்க்கலாம்''.

இதே மாதிரி அர்ஜுனன், நகுலன் சகாதேவன் திருஷ்மத்யும்னன் ஆகியோருக்கும் தகவல் அனுப்ப பட்டிருந்தது. உலூகன் இவற்றைத் தெரிவிக்கவே துரியோதனன் எதிர் பார்த்தபடி எல்லோரும் ஆத்திரம்

அடைந்தார்கள். அவர்கள் உலூக னிடம் ''துரியோதனன் எங்களை வம்புக்கு இழுத்துபோர்புரிய வைத்திருக்கிறான். அவனது விருப் பத்தைக் கண்டிப்பாக நிறைவேற்றி வைப்பதாகக் கூறு'' என்று சொல்லி அவனை அனுப்பினார் கள்.

உலூகனை அனுப்பிய பிறகு தருமரும் திருஷ்டத்யுனனும் தம் படை வீரர்களுக்கு இட வேண்டிய கட்டளைகளைக் கொடுத்தார்கள். திருஷ்டத்யும்னன் கௌரவ வீரர் களை எவ்வாறு எதிர்க்க வேண்டும் என்று விளக்கினான். அர்ஜுனன் கர்ணனை எதிர்க்க வேண்டும். பீமன் துரியோதனனைத் தாக்க வேண்டும். சல்லியன் திருஷ்ட கேதுவைத் தாக்க வேண்டும். உத்தமௌஜன் கிருபரையும், நகு லன் அசுவத்தாமனையும், சைப்பி யன் கிருதவர்மனையும், யுயுதா னன் சைந்தவனையும், சிகண்டி பீஷ்மரையும், சகாதேவன் சகுனி யையும், அபிமன்யு விருஷ சேன னையும், உபபாண்டவர்கள் திரி கர்த்தர்களையும் துரோணரை திருஷ்டத்யும்னனும் எதிர்த்துப் போரிட வேண்டுமென்று தீர்மானி க்கப்பட்டது.

இது போல துரியோதனனும் பீஷ்மரோடு கலந்து யோசித்து யார் யாரை எதிர்ந்துப் போரிடுவது என்று முடிவு செய்தான். கௌரவ சேனையில் அதிரதர்கள் கிருத வர்மா, சல்லியன், சைந்தவன், கிருபர், அஸ்வத்தாமன், துரோணர், பாஹ்லிகன் ஆகியோர். அசுவத் தாமன் தன் உயிரைப் பற்றி அதிகம் கலலைபடுவதால் அவனால் உலகி லேயே மாபெரும் வீரன் என்ற பெயரைப் பெற முடியவில்லை. விருஷசேனன் அலம்பசன் என்ப வர்கள் ராட்சஸ வீரர்கள் இது போக ஏகரதர்கள் பலர் இருந்தனர். கர்ணன் குண்டலங்களையும் கவசங்களையம் இழந்ததாலும் சாபம் அடைந்ததாலும் அர்த்தரதன் என்றே கருதப்பட்டான்.

பாண்டவசேனையிலும் அதிரதர்களும், மகாரதர்களும் ஏக சக்கரரதர்களும் இருந்தனர்.





# கதை சொல்லத் தெரியாதா?

ஒரு ஊரில் பொம்மண்ணன் என்பவன் பொம்மைகள் செய்து விற்று வாழ்ந்து வந்தான். அழகிய பொம்மைகள் அவன் செய்ததால் அவற்றிற்கு நல்ல கிராக்கி இருந்தது. அவன் பல கிராமங்களுக்குப் போய் பொம்மைகளை விற்றதால் வியாபாரம் நன்கு நடந்தது.

ஒரு முறை அவன் ஒரு கிராமத்திலிருந்து தன் ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்த பொம்மண்ணன் ஜனநடமாட்டமில்லாத பகுதியில் செய்று கொண்டிருந்தான். அப்போது இருட்டி விட்டது. சற்று தூரத்தில் 'மினுக்' மினுக்கென்று விளக்கு எரிவது தெரியவே அந்த இடத்தை நோக்கிச் சென்றான். அங்கு ஒரு வீடு இருந்தது. அங்கு போய்ப் பார்த்த போது அதில் ஒரு கிழவன் இருப்பதை அவன் கண்டான். அவன் அக்கிழவனிடம் ''தாத்தா! இருட்டி விட்டது. இன்றிரவு இங்கே நான் தங்கி விட்டு நாளைக் காலையில் நான் போகட்டுமா? என்று கேட்டான்.

கிழவனும் ''ஆகா! உன் கூடையை அந்த மூலையில் வைத்துவிட்டு என் பக்கம் வந்து உட்கார். கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்கலாம். நான் சமையல் செய்து உனக்கும் சாப்பாடு போடுகிறேன்'' என்றான். பொம்மண்ணன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். இரவில் தங்க இடமும், சாப்பாடும் கிடைத்தது தன் அதிஷ்டமே என அவன் எண்ணினான்.

கிழவன் சமையலறைக்குள் போய்விட்டு மறுநிமிடமே திரும்பி வந்து ''சமையல் ஆரம்பமாகி

எஸ். சங்கரராம்

விட்டது, ஒருநொடியில் முடிந்து விடும். நீ ஏதாவது ஒரு பாட்டு பாடு கேட்கலாம்'' என்றான். பொம் மண்ணன் ''எனக்குப் பாடத் தெரியாதே'' என்றான். கிழவனும் ''சரி பாடத் தெரியாது என்றால் போகட்டும். எதாவது கதையாவது சொல்'' என்றான்.

பொம்மண்ணன் கதை சொல் லவும் தனக்குத் தெரியாது என்று கூறவே கிழவன் ''உனக்குப் பாடவும் வராது, கதை சொல்லவும் தெரியாது என்றால் உனக்கு இந்த வீட்டில் இடம் கிடையாது. போ வெளியே'' என்றான் கோபமாக. இவ்வாறு கிழவன் நடந்து கொண்டது பொம்மண்ணனுக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. என்ன செய்வான் பாவம், எதுவும் பேசாமல் அங்கிருந்து தன் கூடையை எடுத்துக் கொண்டு அவ்வீட்டை விட்டு வெளியே வந்து விட்டான்.

தன் ஊரைவிடத் தான் சற்று முன் கிளம்பி வந்த கிராமம் அதிக தூரத்தில் இல்லாததால் அங்கே போய் விடுவது என்று எண்ணிக் கூடையைத் தலை மீது வைத்துக் கொண்டு நடக்கலானான். கொஞ்ச தூரம் போனதும் யாரே ஒருவன் ஓரிடத்தில் அடுப்பு மூட்டி அதன்




மீது ஒரு பானையை வைத்து ஏதோ சமைத்துக் கொண்டிருந்தான். இருட்டில் அவன் உருவத்தைச் சரியாக பார்க்க முடியவில்லை.

அந்த மனிதனே ''ஓ! நீதானா பொம்மண்ணா! இந்த பானையில் உள்ளதை இந்தக் அகப்பையால் கொஞ்சம் கிளறிவிடு. இதோ வந்து விடுகிறேன்'' என்றான். அந்த மனிதன் யாரென்றும் எப்படித் தன்னைக் கண்டு கொண்டான் என்றும் பொம்மண்ணனுக்குத் தெரியவில்லை.



அரசனுக்கு தன் நாட்டில் மட்டும் தான் கௌரவமும் மரியாதையும். பண்டிதரோ எந்த நாட்டிலும் கௌரவமும் மரியாதையும் பெறுகிறார். எனவே அரசனைப் பண்டிதரோடு ஒப்பிடக்கூடாது.

- சாணக்கியர்

அந்த மனிதன் கொடுத்த அகப்பையை வாங்கி எடுத்துப் பானையில் கொதிக்கும் உணவைக் கிளறலானான். அது என்ன உணவு தயாராகிறதோ? ஆனால் பானை நிறைய அது இருந்தது. சாப்பிடு வதற்கு அந்த ஒரு மனிதனைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை. அந்த உணவில் தனக்கும் கொஞ்சம் கிடைக்கும் என்ற ஆசை அவன் மனதில் எழுந்தது.

அகப்பையை கொடுத்து விட்டுப் போன மனிதன் வரவில் லை. பொம்மண்ணன், அய்யா என்று குரல் கொடுத்தும் எங்கிருந் தும் பதில் வரவில்லை. அப்போது அடுப்பின் மீதிருந்த பானை ''ஏய்! ஏன் கத்துகிறாய்? உம், நன்றாகக் கிளறு'' என்றது. அது கேட்டு பொம் மண்ணன் கையிலிருந்த அகப்பைய யைக் கீழே எறிந்து விட்டு நின் றான். ஏதோ பேயோ பிசாசோ இது என்று பயந்து போனான்.

''என்ன திமிர்'' என்று கூறியவாறே அந்த அகப்பை தரையிலிருந்து உயரக் கிளம்பி பொம்மண்ணன் தலையில் ஓங்கி அடித்தது. பொம்மண்ணன் உயிரே போய் விடுமோ எனப் பயந்து தன் கூடையைக் கூட எடுத்துக் கொள் ளாமல் அங்கிருந்து தலைதெறிக்க ஓடினான். அகப்பை அவனைத் துரத்தியவாறே அவன் முதுகில் அடி கொடுத்துக் கொண்டே போயிற்று.

ஓடும் போது பொம்மண்ணன் ஒரு வீட்டின் வாசல் கதவு திறந்தி ருப்பதைக் கண்டு அவ்வீட்டிற்குள் ஓடி மூடினான். அது அவன் முன்பு பார்த்த கிழவனின் வீடே! ''என்ன நடந்தது? ஏன் பயந்து நடுங்கு கிறாய்?'' என்று கேட்டான். பொம் மண்ணன் நடந்ததை எல்லாம் விவ ரமாகக் கூறினான்.

கிழவன் அவன் கூறியதைக் கேட்டு விட்டு ஒரேயடியாக மகிழ்ந்து போய் ''இந்த மாதிரிக் கதையை நீ முன்பே சொல்லி இருந்தால் உன்னை வீட்டை விட்டு வெளியே போ என்று சொல்லி இருக்க மாட்டேனே. சரி, சரி, சமையலாகிவிட்டது. சாப்பிடலாம் வா!'' என்றான்.





# பணிவதால் தான் பக்தன்!

ராமாபுரத்துப் பெருமாள் கோவிலில் கோவிந்தாச்சாரியார் என்ற அர்ச்சகர் பணி புரிந்து வந்தார். அவர் பெருமாளுக்கு நிவேதனம் செய்ய சுண்டலோ, பொங்கலோ, புளியோதரையோ தயாரிக்க அரணிக்கட்டையைத் தேய்த்து மடப்பள்ளியின் அடுப்பை மூட்டு வார். கோவிந்தாச்சாரியாருக்கு மனைவி மக்கள் என்று யாரும் இல்லை. கோபு என்ற பனிரெண்டு வயது அனாதைச் சிறுவனைத் தன் உதவிக்கு வைத்துக் கொண்டி ருந்தார்.

அவன் கோவிந்தாச்சாரியாருக்கு மலர்கள் கொய்து கொண்டு வந்து கொடுத்தும் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொண்டு வந்து கொடுத்தும், அவருக்கு ஒழிந்த வேளையில் மந்திரங்களைக் கற்றுக் கொண்டும் வந்தான். ஒரு முறை கோவிந்ததாச்சாரியார் உடல் நலம் குன்றிப் படுத்து விட்வே அவருக்கு மருந்து கொடுக்க வைத்தியர் வந்தார். அவரும் அவரது உடல் நிலையைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு ''கவலைப்பட வேண்டிய அளவிற்கு ஒன்றுமில்லை. இரண்டு நாட்களுக்கு ஒரு வேலையும் செய்யாமல் படுத்திருந்து ஓய்வெ டுத்தால் சரியாகி விடும். தலைக்கு மட்டும் இரண்டு மூன்று நாட் களுக்கு குளிக்க வேண்டாம்'' என்று கூறி விட்டுப் போய் வருவதாகக் கூறி விடை பெற்றுக் கொள்ளலானார்.

கோவிந்தாச்சாரியாரும் இரண்டு நாட்களுக்கு பெருமாளுக்கு யார் நிவேதனத்திற்கானவற்றைத் தயார் செய்வது என்று கவலைப் படலானார். அவர் வைத்தியரிடம் ''இரண்டு நாட்கள் குளிக்கக் கூடாதா? அப்படியானால் அந்த இரண்டு நாட்களுக்குப் பெரு மாளுக்கு சேவை செய்ய முடியா தே. அவன்தான் என்னை இப்படிப் படுக்க வைத்தான். அவன்தான் மற்றவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டும். அவன் மேல்

கி.அருணா



பாரத்தைப் போட்டு விட்டு நீங்கள் சொன்னது போல ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியது தான்'' என்றார். வைத்தியரும் ''அப்படியே செய்யுங்கள். பெருமாள் பார்த்துக் கொள்வார் என்று நினைத்துக் கவலையை விடுங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

ஆனால் போன வைத்தியர் அங்கிருந்த கல்தூணில் மோதிக் கொண்டு படுகாயப்பட்டு நினை விழந்து விழுந்தார். அதைக் கண்ட கோவிந்தாச்சாரியார் பதறி எழுந்து கோபுவின் உதவியுடன் வைத்தியரைத் தூக்கிப் படுக்க வைத்து அவரது முகத்தில் தண்ணீர் தெளித்து அவரது மயக்கத்தைப் போக்கினார். சற்று நேரத்திற்குப் பின் வைத்தியருக்கு சுய நினைவு வந்தது.

அவரும் கோவிந்தாச்சாரியாரிடம் ''இதுவும் அந்தப் பெருமாளின் செயலே. இதற்கும் ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும். மயங்கி விழுந்த வைத்தியனான நான் எனக்கே சிகித்சை செய்து கொள்ள முடியவில்லை பார்த்தீர்களா! எல்லாம் அவன் செயல் என்பது தெளிவாகிவிட்டது. நீங்கள் கூறியது சரிதான்'' என்றார்.

கோவிந்தாச்சாரியாருக்குப் பரம திருப்தி. மடப்பள்ளியில் அடுப்பில் நெருப்பு மூட்டி நிவேதனம் தயாரிப்பது பெருமாளின் பக்தரான தன் ஒருவனால் தான் முடியும் என்பது அவரது நினைப்பு. ஊராரும் அப்படித்தான் கூறி வந்தார்கள். அதனால் கோவிந்தாச்சாரியாரின் மனதில் தான் என்ற அகங்காரம் தலைதூக்கியது.

இப்படி அவர் நினைத்துக் கொண்டிருக்கையில் திடீரெனப் புயல் காற்று வீசி பெரும் மழை பெய்யவே கோவிலின் கொடிக் கம்பம் நிலை பெயர்ந்து விழுந்து விட்டது. ஊரார் உடனே ஒன்று கூடி நிதி திரட்டி கொடிக் கம்பத்தை மீண்டும் நட முயற்சிகளை மேற்கொண்டார்கள். அதற்கான முகூர்த்த வேளையும் குறிக்கப் பட்டு விட்டது.

அச்சமயத்தில் வெளியூரிலிருந்து கோவிந்தாச்சாரியாரின் உறவினர் ஒருவர் இறந்து போய் விட்டார் என்ற செய்தி அவருக்குக் கிடைத்தது. கோவிந்தாச்சாரியார் தன்னுடன் சிறுவன் கோபுவை அழைத்துக் கொண்டு அந்த ஊருக்கு

சென்றார். இறந்தவரின் வேறு உறவினர்கள் யாருமே வராததால் கோவிந்தாச்சாரியாரே தகனக் கிரியைகளை எல்லாம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. சாதாரண நிலையாக இருந்திருந் தால் அக்கிரியைகளை அவரே செய்திருப்பார். ஆனால் ஊரில் கொடிக் கம்ப நாட்டு விழாவிற்கு முகூர்த்த நாள் குறிப்பிடப்பட்டு விட்டதால் அவர் அக்கிரியை களைச் செய்யயாமல் கோபுவைச் செய்யச் சொன்னார். அதன் பிறகு அவர் கோபுவுடன் தன் ஊருக்குத் திரும்பி வந்தார்.

முகூர்த்தநாளன்று ஹோமம் செய்ய நெருப்பை அரணிக்கட்டை கொண்டு தான் மூட்ட வேண்டும். கோவிந்தாச்சாரியார் அரணிக் கட்டையைக் கையில் எடுத்துக் கொண்டு 'சாமி' வந்தது போல ஆடியவாறே ''இந்தப் பெருமாள் கோவில் திரேதாயுகத்தில் நாரத முனிவரால் கட்டப்பட்டது. அவர் இசைக்கும் வீணை நாதம் இப்போது எனக்குக் கேட்கிறது. நான் அரணிக்கட்டை கொண்டு நெருப்பை வரவழைக்கும் போது தேவர்களும் இங்கு வந்து விடுவார்கள்'' என்று ஆவேசத் தோடு கூறினார்.

அப்போது அங்கு கூடியிருந்த மக்கள் கோவிந்தாச்சாரியார் பெருமாளின் பரம பக்தர் எனக் கூறிப்பாராட்டினார்கள். கோவிந் தாச்சாரியார் அரணிக் கட்டையைத் தேய்த்தார். ஆனால் அதிலிருந்து நெருப்பு வரவில்லை. மேலும் முயன்றும் நெருப்புவராமல் போகவே அவர் என்ன செய்யவ தென்று தெரியாமல் தலை குனிந்து கொண்டு நின்றார்.



வேறு பலரும் அரணிக்கட்டை யை வாங்கிக் கடைந்தும் நெருப்பு மூளவில்லை. அப்போது கோபு எல்லோர் முன்னும் வந்து ''நான் முயன்று பார்க்கட்டுமா?'' என்று கோவிந்தாச்சாரியாரிடம் அனுமதி கேட்டான். அவரோ ''நீயா? என் உறவினருக்கு தகனக்கிரியைகளை நேற்றுத்தான் செய்தாய். நீ செய்ய முயன்றால் அது பெரிய அபசார மாகிவிடும்'' என்றார். அப்போது அங்கு வந்திருந்த வேத பண்டிதர் களில் ஒருவர் கோவிந்தாச்சாரி யாரிடம் ''ஐயா! நீங்கள் செய்ய வேண்டிய கிரியைகளை

உங்களுக்கு பதிலாகத்தான் இந்த சிறுவன் செய்தான். இதன் பலன் உங்களுக்குத்தான். எப்படி பக்தர்களுக்காக கோவிலில் நீங்கள் அர்ச்சனை செய்தால் பலன் அவர்களுக்குக் கிடைக்கிறதோ அது போலத்தான் இந்தச் சிறுவன் செய்தது. அவன் அரணிக்கடை யைத் தேய்த்து தீ வரவழைத்தால் அது அபசாரமாகாது. இப்போது நீங்கள் செய்தது அபசாரம்'' என்றார்.

கோவிந்தாச்சாரியாரும் வெட்கி ''ஆமாம் நீங்கள் சொல்வது சரியே. இவன் எனக்காக செய்ததன் பலன் எனக்கே கிடைக்கும். இதைப் புரிந்து கொள்ளலாமல் நான் தான் பக்தன் என்ற அகந்தை கொண்டு அரணிக்கட்டையைத் தேய்த்து தீ வரவழைக்க முயன்றேன். எனக்கு தகனக்கிரியையின் பலன் கிடைத்திருப்பதால் நான் செய்தது அபசாரமாகி விட்டது. கோபு பரிசுத்தமானவன். அவன் பெருமாளுக்கும் பல பணிகள் செய்து வருகிறான். அவன் அவரது பக்தனே. அவன் அரணிக் கட்டையைத் தேய்த்தால் கண்டிப்பாக நெருப்பு வெளிப் படும். கோபு! நீ அரணிக்கட்டை யை எடுத்துத் தேய்'' என்றார்.

கோபு அரணிக்கட்டையை எடுத்துத் தேய்க்கவே நெருப்பு வெளிப்பட்டது. அதைக் கொண்டு பண்டிதர்கள் ஹோமம் செய்தார் கள். ஹோமம் முடியவே கொடிக் கம்பம் நாட்டப்பட்டது. இதன் பிறகுதான் மறுநாள் கோவிந்தாச் சாரியாரால் அரணிக் கட்டையைத் தேய்த்து மடப்பள்ளி வேலை களைச் செய்ய முடிந்தது. தூய மனதுடன் கடவுளுக்கு இலை தழைகளையோ பழங்களையே அல்லது நீரையோ கூட அர்ப்பணம் செய்பவன் அவரது பரம பக்தனா கிறான் என்ற கீதையின் உபதேசம் தான் எவ்வளவு உண்மை என நினைத்து அவர் பரவசப்பட்டார்.



# மனதில் ஒட்டும் அழுக்கு!

ஒரு காட்டின் பக்கத்திலிருந்த கிராமத்திலிருந்து வேறொரு ஊருக்கு ஒரு திருமணத்தில் கலந்து கொள்ள ஒரு தந்தையும் மகனும் சென்றார்கள். காட்டில் கொஞ்ச தூரம் போனதும் ஒரு குட்டையின் சேற்றில் ஒரு ஆட்டுக் குட்டி சிக்கித் தவிப்பதை அவர்கள் பார்த்தார்கள். அது சேற்றிலிருந்து வெளி வர முடியாமல் திண்டாடியது.

அதைக் கண்ட தந்தை அந்தக் குட்டைக்குள் குதித்து ஆட்டுக் குட்டியைத் தன் இருகைகளாலும் தூக்கிக் கொண்டு கரைக்கு வந்தான். அதைத் தரை மீது விட்டதும் அது உடம்பை ஒரு குலுக்கு குலுக்கி மரங்களுக்கிடையே ஓடியது. ஆனால் அது குலுக்கிய துலுக்கில் அதன் உடலில் ஒட்டியிருந்த சேறு சிதறி தந்தையின் உடைகளை அழுக்காக்கி விட்டது.

இதைக் கண்ட அவனது மகன் ''அப்பா! ஆட்டு குட்டியை அநாவசியமாகக் காப்பாற்றப் போய் உங்கள் ஆடைகளை அழுக்காக்கிக் கொண்டு விட்டீர்களே. இந்த ஆடைகளோடா திருமணத்திற்குப் போவது?'' என்று கேட்டான்.

அது கேட்டு தந்தை குறுநகை புரிந்து ''ஆடையில் ஒட்டிய அழுக்கை எளிதில் போக்கி விடலாம். ஆனால் ஒரு உதவி செய்ய வாய்ப்பு கிடைத்தும் அதைச் செய்ய போய் விட்டால் அப்போது மனதில் ஒட்டும் அழுக்கைப் போக்க முடியுமா?'' என்றான்.



# கண்டு பிடியுங்கள் எழுதுங்கள்

இந்த இதழில் வெளியிடப்பட்ட வினாக்களின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். இதனால் நீங்கள் பாரத தரிசனப் போட்டியின் விடைகளை அனுப்பலாம். அதற்கான முயற்சியில் நீங்கள் ஈடுபட வேண்டும். இதற்கு முன் வெளியான இதழைக் கவனமாகப் படியுங்கள். அதன் கதை உங்களுக்கு ஏன் பிடித்தது என்பதை 20 வாக்கியங்களில் எழுதி அனுப் புங்கள். உங்கள் வயது, மாணவரானால் கல்வி பயிலும் பள்ளியின் பெயர், வகுப்பு, உங்கள் முழுமுகவரி ஆகியவற்றையும் எழுதி விடைகளுக்குக்கீழ் நீங்கள் உங்கள் கையொப்பமிட்டு எங்களுக்கு அனுப்ப வேண்டும். உங்கள்கையொப்பமே என உறுதி செய்ய உங்கள் ஆசிரியரோ அல்லது உங்களது தாய் தந்தையரின் ஒருவரது கையொப்பமோ உடன் இருக்க வேண்டும், விடைகளை ' பாரத தரிசன வாசகர்கள் போட்டி' சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை 600026 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

*முதல் பரிசு ரூ 1000/-* — *மேலும் ஐந்து ஊக்கப் பரிசுகள்.*
*இரண்டாவது பரிசு ரூ 500/-* — *பரிசு ஒவ்வொன்றும் ரூ 200/-*

## அம்புல





### 1 பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி :

இருண்ட இரவில் நகரின் தெருக்களில் ஜனநடமாட்டம் இல்லை. புனித நதிக்கரை மயானத்தில் சில பிணங்கள் எரிந்து கொண்டிருந்தன. ஒரு பெண் இறந்து போன தன் மகனைத் தூக்கிக் கொண்டு அழுது புலம்பியவாறே அம்மயானத்திற்கு வந்தாள். அந்தப் பிணத்தை எரிக்க அவள் கட்டணம் செலுத்த வேண்டும். மயானத்து வெட்டியான் கட்டணம் வசூலித்துத் தன் எஜமானனுக்குக் கொடுத்தாக வேண்டும். அந்தப் பெண்ணிடம் காசு இல்லை. வெட்டியானோ கட்டணமில்லாமல் அப்பிணத்தை எரிக்க அவளை அனுமதிக்க வில்லை. வெட்டியான் அப்பெண்ணையும், பிணத்தையும் பார்த்து அவள் தன் மனைவி என்றும் இறந்தது தன் மகன் என்றும் தெரிந்து கொண்டான். இந்தப் புராணக் கதையில் வரும் வெட்டியான் யார்? அந்தப் பெண் யார்? அந்த மயானம் எங்கு உள்ளது?

நம் புராணங்
களில் இந்த ஜதை
பெயர்கள் ஒன்றுக்
மற்றது எவ்வாறு
சம்மந்தப்பட்டது



## விஞ்ஞானமும் விநோதமும் மிளிற இந்திய

# பரிசுகளை வெல்லுங்கள்

மாமா



1. கடற்கரை நகரான பூம்புகாரை வர்ணிக்கும் பழங்கால இலக்கியப் படைப்பு எது?
2. பழங்காலத்தில் பாரத நாடு முழுவதும் சுற்றிக் கதைகளைச் சேகரித்தவர் எனக் கருதப்படுபவர் யார்?
3. சாவித்திரி–சத்தியவான் கதை எந்தப் பழைய நூலில் காணப்படுகிறது?
4. தமிழில் ராமாயணத்தை எழுதிய கவிஞர் யார்?
ஹிந்தியில் ராமாயணத்தை எழுதிய கவிஞர்யார்?
5. புகழ்பெற்ற நாத்திகரான பழங்கால இந்தியத் தத்துவ ஞானி யார்?

தரிசனப் போட்டி




நிபந்தனைகள்

1) சந்தமாமா இந்தியாலிமிடெட் நிறுவனத்தில் பணிபுரிபவர்களோ, அதன் தொடர்புடையவர்களோ, அவர்களது உறவினர்களோ இப்போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது.
2) நடுவரின் தீர்ப்பே முடிவானது. இது சம்மந்தமாக கடிதப் போக்குவரத்து கிடையாது.
3) கையெழுத்து தெளிவாக இல்லாவிடைத்தாள்கள் நிராகரிக்கப்படும்.
4) போட்டியின் முடிவுகள் அம்புலிமாமா ஆகஸ்ட் இதழில் பிரசுரிக்கப்படும்.
5) விடைகள் மே 31ந் தேதிக்குள் வந்து சேரவேண்டும்.

அ. கிருஷ்ணர் – விதர்ப்பம்
ஆ. பலபத்திரர் – குஷஸ்தலி
இ. நளன் – நிஷிதம்
ஈ. மார்க்கண்டேயர்– புஷ்பபத்திர தீர்த்தம்
உ. குகன் –சிருங்கபேரிபுரம்

மொழிகளில் அம்புலிமாமாவே தனிச்சிறப்பானது.



# பாரதநாடு

## அன்றும் இன்றும்




### கல்கத்தா

கிழக்கிந்தியக்கம்பெனியின் ஆட்சி கல்கத்தாவைத் தலைநகரமாகக் கொண்டுதான் நம் நாட்டில் ஆரம்பமாகியது. மதராஸ் சென்னையாகவும் பம்பாய் மும்பையாகவும் பெயர் மாறியது போல கல்கத்தா கோல்கட்டா என மாறப் போகிறது.

இந்தியாவின் வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்தியக் கம்பெனி 1698 நவம்பர் 9ல் சபர்னாராய் சௌதரியிடமிருந்து காளிகட், சுதாநதி, கோவிந்தபூர் என்ற மூன்று கிராமங்களை விலைக்கு வாங்கியது. அதன்பின் ஜாப் சார்னக் என்பவர் வேறு சில பகுதிகளை இவற்றோடு சேர்ந்து கல்கத்தாவை உருவாக்கினார். அந்த மூன்று கிராமங்களில் காளிகட் முக்கியமானது. அங்கு காளி மாதா கோவில் உள்ளது. இந்தக் காரணத்தால் தான் கல்கத்தா என்று பெயர் வந்திருக்கலாம்.

சார்னாக்தான் இந்த நகரை உருவாக்கியவர். சதியாக இருந்த ஒரு பெண்ணை தீயில் விழாமல் காப்பாற்றி அவளையே அவர் மணந்து கொண்டார். சார்னாக்கின் சமாதி கல்கத்தாவில் உள்ளது.

கங்கையின் மறுபெயர் இங்கு ஹூக்ளி. இதன் கரையில் கல்கத்தா அமைந்துள்ளது. வெகு சொற்ப காலத்தில் இது விரிவடைந்து மாநகராகி விட்டது. கிழக்கிந்தியக் கம்பெனி இங்கு ஒரு கோட்டையை 1716ல் கட்டி முடித்தது. மறு ஆண்டில் இதை மையமாகக் கொண்டு வியாபாரம் செய்து வர கிழக்கிந்தியக் கம்பெனி முகலாய மன்னரிடம் அனுமதி பெற்றது. இதுதான் வில்லியம் கோட்டை எனப் புகழ் பெற்றது.

கோட்டையைக் கொண்ட வர்த்தக அங்கிலேயர்கள் நாட்டை ஆள்பவர்களாகி விட்டார்கள். புது

இடங்களைக் கைப்பற்றி அவர்கள் தமக்கென படைகளையும் ஏற்படுத்திக் கொண்டார்கள். வங்காள நவாப் சிராஜ் உத்தெளலாவிற்கும் ஆங்கிலேயர்களுக்கும் மோதல்கள் ஏற்பட்டன 1756ல் நவாப் கம்பெனிப்படைகளைத் தோற்கடித்து கல்கத்தாவைக் கைப்பற்றினான். ஆனால் மறு ஆண்டில் கிளைவ் பிளாஸியின் நவாபைத் தோற்கடித்து கல்கத்தாவை கம்பெனிக்கு மீட்டுத் தந்தான். 1772ல் கம்பெனி மேலும் பல பகுதிகளை வென்று வாரன் ஹேஸ்டிங்க்ஸை கவர்னர் ஜெனரல் ஆக்கியது. அவன் வில்லியம் கோட்டையிலிருந்து கொண்டு தான் ஆட்சி புரிந்தான். கல்கத்தா 1912 வரை ஆங்கில ஆட்சியில் தலைநகராக இருந்து பின்னரே தலைநகர் டில்லியாக மாற்றப்பட்டது கல்கத்தா தற்போது மேற்கு வங்காள மாநிலத்தின் தலை நகர்.

கல்கத்தாவில் மிகப் பழமையானது காளிகட் கோவில், பாரஸ்வநாதர் ஆலயம் அழகான ஜைனக் கோவில், மதன் மோகன் ஆலயம் ஆர்மீனியன் மாதா கோவில், சென்ட்பால் கதீட்ரல் ஆகியவையும் குறிப்படத்தக்கவை. ஷஹீத் மீனார், விக்டோரியா நினைவு அருங்காட்சியகம் ஆகியவை சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்து இழுக்கும் கட்டடங்கள். கவி ரவிந்தர நாத தாகூர் பிறந்த இடம், பல பல்கலைக் கழகங்கள், பல கலாசார அமைப்புகள், இந் நகரில் உள்ளன. மின்விசையில் ஓடும் ட்ராம் வண்டி நம் நாட்டிலேயே இந்நகரம் ஒன்றில்தான் உள்ளது. 1962ல் இந்தியாவின் முதல் ப்ளான டோரியம் இங்கு நிறுவப்பட்டது. 1997ல் முதலாவது விஞ்ஞான நகரம் இங்கு அமைக்கப்பட்டது.

கல்கத்தா, ஹுக்ளி ஆகிய இரட்டை நகரங்களின் மொத்த மக்கள் தொகை 82 லட்சம். 24 பர்கானாக்களும் கல்கத்தாவின் ஒரு பகுதியாகவே கருதப்படுகிறது.








## அமெரிக்க ஜனாதிபதியின் இந்தியப்பயணம்



கலந்தாலோசித்தபின் நட்புறவு ஒப்பந்தம்

அமெரிக்க அதிபர் கிளின்டன் இந்தியாவிற்கு வருகை தந்தது வரலாற்றில் அழியாத இடம் பெற்ற நிகழ்ச்சியாகும். அவரது வருகைக்குச் சில மாதங்களுக்கு முன்பிருந்தே தினமும் இந்தியப் பத்திரிகைகளும் ஒலி ஒளிபரப்பு சாதனங்களும் நாள்தோறும் தொடர்ந்து அறிவித்து அது பற்றி விமர்சனங்களும் செய்து வந்தன. இது ஏன்? அமெரிக்கா ஜனநாயக ஆட்சியை மதித்து அம்முறையைக் கடைப் பிடித்து வருவதால் உலகிலேயே மிகப் பெரிய ஜனநாயக நாடான இந்தியாவிற்கு அவர் வந்தது ஒரு சிறப்பு நிகழ்ச்சியே .

இந்தியா 1947 ல் பிரிக்கப்பட்டு இந்தியா, பாகிஸ்தான் என்று இரு நாடுகளாகியது. இந்தியாவில் ஜனநாயகம் தழைக்க, பாகிஸ்

தானில் சர்வாதிகாரிகளின் ஆட்சி நிலவியது. அதன் ஒருமைப் பாடும் குலைந்து அதிலிருந்து பங்களா தேஷ் பிரிந்து தனி நாடாகியது. பாகிஸ்தானில் ஜனநாயகம் தலை தூக்க முடியாமல் திணறுகிறது. தற்போது கூட ஜனநாயக முறை யில் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதமர் நவாப் ஷெரீப் சிறையில் தள்ளப்பட்டு ராணுவ தளபதி ஆட்சியைக் கைப்பற்றியுள் ளார். ஆயினும் அந்நாட்டில் அமெரிக்க ஜனாதிபதி சில மணி நேரம் தங்கி விட்டுச் சென்றார். இது மரியாதை நிமித்தமாகத்தான்.



ஆனால் முன்பு வல்லரசுகளாக அமெரிக்காவும் ரஷ்யாவும் ஒன்று க்கு மற்றது கடும்பகைவராக இரு ந்து அமெரிக்கா பாகிஸ்தானு டன் நெருங்கிய உறவு கொண்டிருந் தது. ரஷ்யாவோ இந்தியாவின் நண்ப னாக இருந்தது. சோவியத் யூனி யன் பல நாடுகளாகப் பிரிந்து வலு விழந்து ஒரு வல்லரசு என்ற தகுதி யை இழக்கவே, அமெரிக்காவி ற்கு பாகிஸ்தானுக்கு தேவையற்ற தாக ஆகி விட்டது. ஜனநாயக நாடான இந்தியாவிற்கு அமெரிக் காவிலேயே நல்ல ஆதரவு பெரு கவே அமெரிக்க அரசாங்கமும் இந்தியாவை மதிப்பதே சிறந்தது எனக் கருதி வருகிறது. இந்தியா சக்தி வாய்ந்த நாடாகி விடும் என்ற காரணத்தால் இந்த இருநாடுகளும் நண்பர்களாக இருக்க வேண்டு மென்று கருதுகின்றன.

இந்தியாவிற்கு வருகை தந்த அமெரிக்க ஜனாதிபதி கிளின்டனுக்கு அமோக வரவேற்பு அளிக்கப்பட்டது. அவரது வருகையால் நம் நாட்டிற்கு ஏற்படும் பயன்கள் போகப் போகத்தான் தெரிய வரும்.

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ
வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி மே 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



மார்ச் 2000 போட்டியில்
பரிசு பெற்றவர் :
எஸ். லலிதாசுப்பிரமணியம்
49, கிழக்கு டபீர் தெரு,
கும்பகோணம் - 612 001.



பரிசு பெற்ற தலைப்புகள்

முதலாவது போட்டோ : கூடிக்களிக்கும் வேளை இது!
இரண்டாவது போட்டோ : கூட்டிக் கழிக்கும் வேலை இது!

